ஐஞ்சிறு காப்பியங்களில் ஒன்றான

" நீலகேசி"

nIlakEci

(one of the five minor epics)

In tamil script, unicode/utf-8 format

Acknowledgements:

Our Sincere thanks go to the Tamil Virtual Academy for providing a source of this work.

Preparation of HTML and PDF versions: Dr. K. Kalyanasundaram, Lausanne, Switzerland.

# ஐஞ்சிறு காப்பியங்களில் ஒன்றான
# " நீலகேசி"

நீலகேசி என்பது ஐஞ்சிறு காப்பியங்கள் எனப்படும் ஐந்து தமிழ் இலக்கிய நூல்களுள் ஒன்று. சமண சமய நூலான நீலகேசி ஒரு கதைப் பின்னணியில் சமணக் கொள்கைகளை விளக்குகின்றது. தமிழில் எழுதப்பட்ட முதலாவது தருக்க நூல் இதுவெனக் கூறப்படுகின்றது. பௌத்த சமயத்தின் பெருமை கூற எழுந்த காப்பியமான குண்டலகேசி எனும் நூலுக்கு மறுப்பாகவே நீலகேசி எழுதப்பட்டுள்ளது. எனினும் இதனை எழுதியவர் யார் எனத் தெரியவில்லை.

இந்நூல் கடவுள் வாழ்த்து தவிரப் 10 பகுதிகளாக வகுக்கப்பட்டுள்ளது. இப் பதினொரு பகுதிகளிலும் மொத்தமாக 894 பாடல்கள் உள்ளன.

Source:
ஐஞ்சிறுகாப்பியங்கள். நீலகேசி.
சென்னை : தமிழ் நிலையம், Cennai : Tamil Nilaiyam, 2007.

**உள்ளடக்கம்**

# " நீலகேசி"

## 1. கடவுள் வாழ்த்து (1-9)

இதுவும் அடுத்த செய்யுளும் குளகம்
நல்லார் வணங்கப் படுவான்பிறப் பாதி நான்கு
மில்லா னுயிர்கட் கிடர்தீர்த்துய ரின்ப மாக்குஞ்
சொல்லான் றருமச் சுடரானெனுந் தொன்மை யினா
னெல்லா முணர்ந்தா னவனேயிறை யாக வேத்தி. 1

இதுவுமது
அன்னான் பயந்த வறவாரமிர் துண்டு நின்றார்
இன்னா ரினைய ரெனவேண்டுவ தில்லை யார்க்கும்
பன்னாந் துணையும் பணிந்தாகிய பத்தி யினா
னென்னா லுரைக்கப் படுகின்றதொன் றீங்கு ளதே. 2

அவையடக்கம்
பண்டாக மத்துட் பயிலாவுரை யென்று மிக்கார்
விண்டீங் கிதனை வெகுளார்விடல் வேண்டு வன்யான்
தண்டா மரைமே னடந்தான்றடந் தாள்வ ணங்கிக்
கண்டேன் கிடந்தேன் கனவின்னிது கண்ட வாறே. 3

ஆய்நீல வுண்க ணவளாயடங் காமை செய்யும்
பேய்நீல கேசி பெரியோனறங் கொண்ட பின்னைத்
தீநீல வுள்ளந் திரிந்தேறு திருவத் தளாய்
மாஞால மெல்லா மறமாற்றிய மாட்சி யளா. 4

தேவன் னுரைப்பத் தெளிந்தேன்பிற் றெளிந்த வெல்லாம்
மாவென் றுகொண்டேன் மடனேவலி யாக நின்று
நாவல் புலவ ரவைநாப்பண்ணி நாட்ட லுற்றேன்
பாவின் னவென்று பழிப்பாரினி யில்லை யன்றே. 5

கண்டிங்கு நாளுங் கடல்வையகங் காதல் செய்யும்
வெண்டிங்க டானும் விமலந்தனக் கில்ல தன்றே
கொண்டென்சொ லெல்லாங் குணனேயெனக்கூறு கென்னே
னுண்டிங்கோர் குற்ற மெனில்யானுமொட் டாமை யுண்டோ. 6

தெள்ளி நரைத்துத் தெருளாதுறு தீமை செய்யும்
புள்ளி னுரையும் பொருளாமெனக் கோட லினா

லெள்ளுந் திறத்த.: துரையென்றிது நீக்க லின்றாய்க்
கொள்ளும் முலகங் குணமாணறம் வேண்டு மென்றால். 7

பதிகம்
நாடும் மநாடா ளரசுந்நக ருந்நகர்சூழ்
காடுங் கடவுள் புகனீக்குதல் கார ணம்மாத்
தேடுஞ் சிறுபேய் பெரும்பேய்த்தியைச் சென்று பற்றும்
பாடும் மவடான் பகைகொண்டுபல் கால்வெ ருட்டி. 8

தான்கண்ட வன்செய் தவந்தன்னைக் கலக்க கில்லா
மான்கொண்ட நோக்கின் னவளாய்மற மாற்றி யபின்
னூன்கொண்ட காட்சி முதலாக வுடைத்த தெல்லாம்
யான்கண்ட வாறே யுரைப்பன்னவை யார்க் கிதனை. 9

------------

## 2. தர்ம உரைச் சுருக்கம் (10 – 149)

மாஞ்சோலை பொங்கி மருதங்கிளிப் பிள்ளை கள்வாய்த்
தீஞ்சா றொழுகுந் திணையின்னணி தங்கி யேங்குந்
தாஞ்சால வாழ்நா டளிரீனுந் தகைய துண்டு
பாஞ்சால மென்று பலரும்புகழ் பார்த்தி நாடே. 10

வாடா வளத்தான் மலர்ஞால மதிப்பின் மிக்க
நாடாவ தி•தா மதனன்னலஞ் சொன்ன லத்தாற்
கூடா தெனினுஞ் சிலகூறலும் வேண்டு மன்றே
பாடா விருந்தார் பரிவஞ்சும் படிய தன்றே. 11

வருபுனலன வளவயலிடை மறிவனவின வாளை
மருவினியன மகிழ்தகையன மலர்சிறையன நாரை
கருவரியன கடுநடையன கனைகுரலன கம்புள்
திருவுருவின தெரிகதிரின திசைதிசைதொறு செந்நெல். 12

பணைநிலையன கமுகொடுபடு பழமுதிர்வன தெங்க
மிணைநிலையன சுளைகனியிவை யினியனபல வாழை
மணனயர்வன மனையயலன மதுவிரிமணி நீலந்
திணிநிலையன திரளரையன தெரிமலரன மருதம். 13

கரைதழுவிய கழிமடலின கடிகமழ்வன கைதை
புரைதழுவிய பொதியவிழ்வன பொன்மலர்வன புன்னை
விரைதழுவிய விழைதகையன வெறிமலர்விரி ஞாழல்
நிரைதழுவிய நெறிகழியிடை நிகரலரன நெய்தல். 14

குருவுடையன கொடிமிடைவொடு குலைவிரிவன கோடல்
தருசுடரன தளவயலின தகைமலரன தோன்றி
யருகுடையன வணியுருவின வயலனவலர் காயா
முருகுடையன முகைவிரிவன முறியலர்வன முல்லை. 15

நனைசினையன நகுவிரையன நலனுடையன நாகம்
வினையுடையன பொழுதிவையென விரிவனகணி வேங்கை
கனைசுடர்விடு கதிர்மணியறை களனயர்வன காந்த
ளினியனபல சுனையயலன விறுவிரையன குறிஞ்சி. 16

ஆடலொடு பாடலவை தாமறுத லின்றிக்
கேடில்புக ழாரவைகள் கண்டுமிசை கேட்டு
மூடலொடு கூடலுணர் வார்கள்புணர் வாராய்ச்
சேடரொடு சேடியருஞ் செல்வமிக நல்கி. 17

தானமொடு சீலமவை தாங்கிநல மோங்கி
மானமொடு மாயமில ராயமனை யாருங்
கானமொடு கல்லடரு ளில்லிடரு நீங்கி
ஞானமொடு செய்வினைக ணையமுயல் வாரும். 18

அந்தணரு மல்லவரு மாகியுட னாய
மந்தமறு நால்வருண மாட்சியின ராகித்
தந்தநெறி யிற்றிரித றானுமில ராகி
நந்திமிசை சேறலுடை நன்மையத நாடே. 19

ஞாலமறி நன்மையுடை நாடதென லானு
மாலுமழை மூன்றுமுடை மாதமென லானுங்
காலமவை தாங்கடுமை காண்பருமை யாலும்
பாலைநில மொன்றுமவ ணின்மை பழுதன்றே. 20

இன்ன தன்மையி னாடினி தாளுமம்
மன்ன வன்னவன் யாரெனில் வானிடைச்

சொன்ன நீர்மைச் சுரேந்திரன் போன்றிவட்
டன்ன னாரில் சமுத்திர சாரனே. 21

ஆற்ற லாலரி மாவவ னாணையாற்
கூற்ற மேயெனக் கூறலு மாங்குடி
போற்ற றாயனை யான்பொருந் தார்கண்மேற்
சீற்றத் தாற்றெறு தீத்திர ளேயனான். 22

தீய தீரத் திருவிளை யாடிய
தேயங் காவல னாய்த்திசை யாவினு
மீய நீண்டகை யேந்த னகர்திசை
போய புண்ட வருத்தன மென்பதே. 23

வளங்கெழு நெடுமதில் வாயில் யாவையு
முளம்புக விழுங்கியிட் டுமிழ்வ வொத்துமேல்
விளங்கிவெண் மதிசெலல் விலக்கி நீள்விசும்
பளந்ததன் றுணைமையு மறிவ தொத்தவே. 24

விரைசெல லிவுளியும் வேழ வீட்டமு
நிரைசெலற் கொடுஞ்சிநன் னேமி யூர்தியு
மரசுடைப் பெருங்கடை நெருங்கு மார்கலி
திரைபொரு கடலொலி யன்ன செம்மற்றே. 25

அகிற்புகை யளாவியு மணிகொள் வீதியிற்
றுகிற்கொடித் தொகுதியுந் தூய சுண்ணமு
முகிற்றலைக் கலலிவான் மூடி மாநகர்
பகற்கிடை கொடாததோர் பான்மை மிக்கதே. 26

ஆங்க மாநக ரணைந்தது பலாலைய மென்னும்
பங்கொள் பேரதவ் வூரது பிணம்படு பெருங்கா
டேங்கு கம்பலை யிரவினும் பகலினு மிகலி
யாங்கு நீர்வையத் தோசையிற் போயதொன் றுளதே. 27

விண்டு நீண்டன வேய்களும் வாகையும் விரவி
யிண்டு மீங்கையு மிருள்பட மிடைந்தவற் றிடையே
குண்டு கண்ணின பேய்களுங் கூகையுங் குழறிக்
கண்ட மாந்தர்தம் மனங்களைக் கலமலக் குறுக்கும். 28

ஈமத் தூமமு மெரியினு மிருளொடு விளக்கா
வூமைக் கூகையு மோரியு முறழுறழ் கதிக்கும்
யாமத் தீண்டிவந் தாண்டலை மாண்பில வழைக்கும்
தீமைக் கேயிட னாயதோர் செம்மலை யுடைத்தே. 29

வெள்ளின் மாலையும் விரிந்தவெண் டலைகளுங் கரிந்த
கொள்ளி மலையுங் கொடிபடு கூறையு மகலும்
பள்ளி மாறிய பாடையு மெலும்புமே பரந்து
கள்ளி யாரிடைக் கலந்ததோர் தோற்றமுங் கடிதே. 30

காக்கை யார்ப்பன கழுதுதங் கிளையொடு கதறித்
தூக்க ளீர்ப்பன தொடர்ந்தபல் பிணங்களுந் தூங்கச்
சேக்கை கொள்வன செஞ்செவி யெருவையு மருவி
யாக்கை கொண்டவர்க் கணைதலுக் கரிதது பெரிதும். 31

கோளி யாலமுங் கோழரை மரங்களும் குழுமித்
தூளி யார்த்தெழு சுடலையு முடலமுந் துவன்றி
மீளி யாக்கைய தாக்கியுண் பேய்க்கண மிகைசூழ்
கூளி தாய்க்கென வாக்கிய கோட்டமொன் றுளதே. 32

இறைவி கோட்டத்து ளீரிரு திங்கள தகவை
யுறையு ளாகவவ் வுறையருங் காட்டகத் துறைவான்
பொறையு மாற்றலும் பூமியு மேருவு மனையான் தான்.
சிறைசெய் சிந்தைய னந்தமில் பொருள்களைத் தெரிந் 33

அத்தி காயங்க ளளவைக ளாலளந் தறிவான்
குத்தி யாதிய குணங்களிற் பெரியவ னரிய
பத்தின் மேலிரு தவத்தினிற் பவத்தொட றறுக்கும்
முத்தின் யான்முனிச் சந்திர னெனும்பெயர் முனிவன். 34

அன்றக் கோட்டத்து ளறிவிலா மறிதலை யறுப்பான்
சென்ற தெய்வதைக் கெனச்சிலர் சிறப்பயர் பொழுதின்
நின்றக் கோண்மின மெனச் சொல்லி நெறியறி வுறுவோ
னொன்றற் பல்வகை யுயிர்க் கொலை யுரைமின மெனவே. 35

பண்டிந்நின்ற பணைத்தோளி பாலற்பெ றாமையைக்
கண்டியாமிக் கணமோடி தன்பாற்சொன் னோமாக
வுண்டதாயிற் றோர்குழவி யென்னவுவப் பித்தற்குக்

கொண்டுவந்தே மறியறுக்க வென்றார் கொலையாளர். 36

ஊனுடம் போவுயிரோ வுறுகுழவி யாத
றேனொடுங்குங் குழலாட்குத் தேவர்மன னுந்தந்த
தூனுடம் பென்னி லுதிரமா முயிரென்னின்
மானிடமாம் வினைமேலைச் செய்தன்றோ வந்ததென்றான். 37

ஏறியானை யிருங்கலைக ணேர்ந்தா ரவையிவையென்
றூறங்கி யுருவுருசெய் தாலுமுவந் தொழிபவான்
மாறுகோ ளிலைமண்ணான் மறியுருசெய் தீந்தக்காற்
பாறினீர்க் கும்மவர்க்கும் பழிபாவ மொன்றிலையே 38

கொன்ற வன்னே கொடியனென வுலகங் கூறு மதனாலு
மொன்ற நூலா ருரைகளோ டொப்ப முடியு மதனாலு
மின்றி னின்று மிதுவொழிதி ராயி னுங்கட் கிருமைக்கு
நன்றி தென்றான் வெந்நரகம் புகுதல் விலக்கு நாவினான். 39

கோறல் பொய்த்தல் கொடுங்களவு நீக்கிப் பிறர்ம னைகண்மேற்
சேற லின்றிச் செழும்பொருண்மேற் சென்ற சிந்தை வேட்கையினை
யாறு கிற்பி னமருலக நுங்கட் கடிய தாbமன்றான்
நீறு மோடு நிழன்மணியும் பொன்னு நிகரா நோக்குவான். 40

ஏத்து தற்கேற் றானிரங்கி யின்ன வைசொல் லக்கேட்டுப்
பாத்தி யோயெம் பழவினையும் பாறு கென்று பணிந்துதாம்
யாத்து நின்ற வம்மறியும் மறமு முடனே கொண்டுபோய்க்
காத்து மென்றார் கருவினையு ணீங்கு நல்ல கருத்தினார். 41

ஆய மெல்லா மதுசொல்லிப் போக வவணே வாழ்கின்ற
பேயுங் கூடிப் பெரிதுமகி சூழ்ந்து தம்பெற் றிசொல்லி
னாயு மாக்க ருத்துமில னாவ னிவனங் கட்கென்னிற்
றீயு மன்னென் றேற்றகரு மையாலெனுஞ்சிந் தையிலவாய் 42

நிரந்து வெங்கதி ரெழுதலி னிற்றலை யிலதாய்க்
கரந்த காரிருள் போற்கணங் காண்டலுக் கரிதாய்ப்
பரந்த நாம்பல நாடுகள் பாடிக ணாடி (றெண்ணி)
யிரந்தோர் வன்றெய்வங் கொணர்ந்திவற் கடிதுமென் 43

ஆசு மிங்கிருந் தினியென்னை எழுகவென் றயல

காசி நாட்டினுஞ் சேடிய நாட்டினுங் காணா
தேசந் தாம்பல திரியவத் தென்றிசை நீல
கேசி மாதெய்வந் தலைப்பட்டுக் கிளர்ந்தின்ன வுரைக்கும். 44

வலிசெய் தெம்மிடம் புகுந்தடு மடையொடு முடைசேர்
பலியு மூட்டுதல் பாவமீ தெனப்பலர்க் குரைத்துக்
கலிகொள் காடுதன் காற்பொடி யாகவுங் கருதா
னலைசெய் தானெமை யாமுனக் கபயமென் றழுத. 45

அழுவ தென்செய அருந்தவம் வலித்தவ னிருந்து
பொழுது போக்குதல் புரிந்தனன் பொருத்தம• துடைத்தே
கழுகு தாமுணக் காட்டுவ னெனக்கைகள் புடையா
வெழுக வென்றுசென் றிடுபிணப் பறந்தலை யிருந்தாள். 46

இருட்டி ருட்டென நடந்துசென் றெழுந்தெழுந் திருக்கும்
வெருட்ட லன்னினை விழுங்குவ னெனத்தன்னை வியக்கு
மருட்டி றம்மில னறியினி யருவரை நெடுங்கோட்
டுருட்டு வேனென வுயர்தவத் தவன்முன்னை யுரைக்கும். 47

சீல நல்லன சினவரன் றிருமொழி தெளிந்தான்
கால மூன்றினுங் கடையில்பல் பொருளுணர் வுடையான்
மேலு மின்னபல் வியந்தரம் வெருட்டுத லறிவான்
நீல கேசிதன் னெறியின்மை யிதுவென நினைந்தான். 48

வெருட்டு மாகிலும் வெருட்டுக விகுர்வணை களினாற்
றெருட்டு வேனிவ டிறமின்மை சிறிதிடைப் படலும்
பொருட்டி றங்களைப் புலமையிற் புனைந்துரை பெறுமே
லருட்டி றந்நல வறநெறி பெறுதலு மறிந்தான். 49

மாக மேயுற மலையன்ன சிலையொடு சிலையா
மேக மேயென விசும்பிடை வெடிபட விடியா
நாக மேயென நாவினை நீட்டுவ காட்டாப்
பாக மேயெனப் பலவெனச் சிலவென வுலவும். 50

இலங்கு நீளெயிற் றிடையிடை யழலெழச் சிரியாக்
கலங்கு மார்ப்பொடு சார்ப்படு மழையெனத் தெழியாப்
பிலங்கண் டன்னதன் பெருமுழை வாய்திறந் தழையா
மலங்க நின்றுதன் மடனெடு மயிர்க்கையிட் டுயிர்க்கும். 51

பொங்கு பூமியுட்பொடிபட வடியிணை புடையாப்
பங்க மேசெய்து படபட வயிறடித் திறுகி
யங்கி போலவீழ்ந் தலறிநின் றுலறியங் காக்கு
மெங்குந் தானென வெரிகொள்ளி வளையெனத் திரியும். 52

கல்லி னாற்கடுங் கனலினுங் கடுகென வெடிக்கும்
வில்லின் வாய்ப்பெய்து விளங்குவெண் பகழிகள் விடுக்கும்
மல்லி னாற்சென்று மறித்திடு வேனென நெறிக்கும்
பல்லி னாற்பல பிணங்களி னிணங்களைப் பகிரும். 53

ஓடு முட்குடை யுருவுகொண் டருவென வொளிக்கும்
பாடு பாணியிற் பலபல கலகல வொலியா
ஆடு நாடக மரும்பசி களைகென விரும்பி
ஊடு போவனென் றுரைத்துரைத் துள்ளஞ்செய் தொழியும். 54

குஞ்ச ரம்பெருங் கொடுவரி கடுவிடை கொலைசூ
ழுஞ்சு தன்மைய வடலரி யெனவின்ன பிறவும்
வெஞ்சி னம்பெரி துடையன விவையினும் வெருளான்
றஞ்ச மன்றிவன் றவநிறை சுடுமெனத் தவிர்ந்தாள். 55

அச்ச மேயுறுத் தழிக்குவன் தவமென அறியேன்
விச்சை வேறிலன் விழுக்குண முடையனிவ் விறலோன்
இச்சையாலன்றி யிவன்முன்னை நிலையெனக் கரிதா
நச்சு மெய்யென நடுங்கும் னுடம்பென வொடுங்கி. 56

ஆற்றல் சான்றவ னருந்தவ வழலெனை யடுமான்
மாற்று மாறென்கொ லெனநனி மனத்தினு ணினையாச்
சீற்றந் தீர்ந்தென்செய் கருவினை தணிகெனப் பணிந்தாள்
கூற்றம் போல்வதோர்கொடுமையையுடையவள் குறைந்தே. 57

சிந்தித் தாளிது செறியெயிற் றரிவைய துருவாய்ப்
பந்தித் தாகிய பழவினை கெடுகெனப் படிற்றால்
வந்தித் தியான்கொண்ட வடிவினின் மனநிறை யழித்தா
னொந்தித் தீநிகர் நோன்புகை விடுமிவ னெனவே.] 58

யாம நீங்கலு மரசன்ற னொருமக ளுரைசால்
காம லேகைதன் னுருவொடு திருவெனத் தோன்றித்

தாமஞ் சாந்துதண் மலரின்ன பலகொண்டு துணைசால்
சேமங் காவல சேவடி போற்றெனச் சென்றாள். 59

வணங்கி வந்திடம் வலங்கொண்டு வழிபடு பொழுதில்
கணங்க டாம்பல கடன்சொல்லிக் கலந்தெடுத் தேத்தித்
துணங்கை யாடத்தன் றுகிலிடை மேகலை துளங்க
வணங்கு மெய்யவ ளருந்தவ னுழைவர நினைந்தாள். 60

காவ லாளகுங் கடையிறந் திவண்வர வொழிக
வேவ லாளரு மிதற்கெய்து மியல்குறை முயல்க
கூலி யான்குறை யுளதெனக் குறுகுமி னமரென்
றோவில் பல்புக ழுறுதவ னறியநின் றுரைக்கும். 61

ஆண்டைக் கோட்டத்தை அணைந்ததோ ரகலிலை யால
மாண்டைக் காயதோர் மரமுத லிருந்தமா தவனைக்
காண்டக் காயென்செய்கருவினை தணிக்கெனப் பணிந்தாள்
வேண்டிக் கொண்டவவ் வியத்தகுவிளங்குரு வுடையாள் 62

வேண்டிய வுருவத னாலும் வேட்கைசெய் யுருவத னாலுங்
காண்டகு மடவர லுருவங் காமுறு வதுநனி தாங்கி
யீண்டிய மிகுகுணத் திறைவ னியல்பினை யெனையது நினையா
நீண்டதோர் கொடியயற் கொடிபோ னிறைதவ வருளென நின்றாள். 63

உடம்பொடு முயிரிடை மிடைந்த வொற்றுமை வேற்றுமை விகற்பிற்
றொடர்ந்தபல் வினைகளைத் துணிக்குஞ் சுதநெறி முறைமையு மறிவான்
படர்ந்ததன் யோகினை நிறுவிப்பணிந்தவரட் காசிடை மொழிந்தா
னிடம்பக மகளிவள் பெரிது மிராசபுத் திரியல ளெனவே. 64

என்னைஈண் டைக்கு வரவென் றருந்தவன் வினவலு மெழிலார்
பொன்னனாள் புடைபெயர்த் திட்ட பொலங்கல மனங்கலக் குவபோன்
மின்னொளி யோடுற மிழற்றமிழற்றுவ கிளியென மொழிந்தாள்
முன்னநான் பரவிய வரங்கண்முடிகுறை கொடுப்பதற் கெனவே. 65

யாதுநீ கொண்ட வரமென் றருந்தவ னியல்பினின் வினவ
வேதினாட் டிறையெங்க ளிறைமே லியல்பின்றி யெழலொழி கெனவே
போதுசாந் தவியொடு புகையும் பொருந்திய பொருந்தெய்வக் கெனலு
மோதிஞா னியிது வாயி னுரையழ கீதென மொழிந்தான். 66

தோடுகொண் டொருசெவி விளங்கத் துளங்குவ மகரமொன் றாடப்
பாடுவண் டோடுசுரும் பரற்றப் பல்கலம் வயிரவில் வீச
வாடுகொம் பனையவ ருரைக்கு மச்சமோ பெரிதுடைத் தடிகள்
காடுகண் டாற்பிறர்க் கறியேன் கவற்றுவ தொக்குமீ தெனக்கே. 67

மணிநகு நெடுமுடி மறவேன் மன்னவன் மகளெனின் மடவாய்
அணிநகை யாயமோ டாடி அரும்பெறற் சுற்றமோ டிருப்பாய்
பிணிமிகு பேய்வன மிதனுட் போதுற லொருதலை பிறவோ
துணிவொடு துறந்தவர்க் கல்லாற் றுன்னதற் கரிதிது பிறர்க்கே. 68

வேணுவோ டினையன பிறவும் வியப்புறு பெருவனம் வினவிற்
பேணுதற் கரிதிது பெரிதும் பிணிதரு பேய்வன மெனவே
வாணுதன் மயிர்குளிர்த் துரைக்கும் மாதவத் தடிகளென் றானுங்
காணுதற் கரியன வுருவங் கண்டறி வனகளு முளவோ. 69

புக்கிருந் தொருமனை யுறைவார் போவதும் வருவதுங் கண்டான்
மக்களுந் தாயரந் தம்முள் மருள்வதும் வெருள்வது முளதோ
மிக்கபல் கதிகளு முயிரின் மெய்ம்மையு முணர்ந்தவர்க் கரிதே
ஒக்குமற் றவையுள வேனு முரைப்பது பொருத்தமின் றெமக்கே. 70

சந்திர முனிவர னுரைப்பத்தளிரியல் சாவுகள் சாரா
மந்திர முளதெனி னடிகள்மனத்தொடு பணிமின மெனவே
யந்தரத்தவர்களும் வணங்குமருந்தவ னவையுனை யடையா
இந்திரன் வேண்டினும் பேய்களென்னமற் றிலங்கிழை மடவோள்; 71

துப்படு துவரிதழ் துடிக்குந்துகிலிடை யகலல்கு றுளக்குஞ்
செப்படு வனமுலை செறிக்குஞ்சிதரரி மழைக்கணுஞ் சிறைக்கு
மொப்படு துடியிடை யொசிக்குமுவ்வுறு மதிமுக முழற்று
மிப்படி யவளிவை செயலுமிவையெனை யெமக்கென வுரைத்தான். 72

காதின கனகப் பைந்தோடுங்கைவெள் வளைகளுங் கழலத்
தாதின வினமலர் பலவுந்தலையன நிலமிசை யுதிரப்
போதன புணரரி நெடுங்கண்புனல்வரப் பூந்துகிற் புடையா
வேதனை பெரிதுடைத் தடிகள்விளிகவிப் பிறப்பென வுரைத்தாள். 73

பிறவியும் பிறவியுட் பிறக்கும் பிணியுமப் பிணியினைத் துணிக்கு
மறவியின் மருந்துமம் மருந்தின்மாட்சியுங் கேட்குறின் மடவா
யறவிய மனத்தினை யாகி அலங்கழித் தொழிலொழிந் தடங்கி

உறவினை யோம்பினை யிருவென்றுயர்தவ னுரைத்தலு மிருந்தாள். 74

நாற்கதி யுள்ள நரகரை நாஞ்சொல்லின் மூன்றுவகைக்
காற்று வலையங்க ளேந்து நிரையக் கதிநிலந்தா
மேற்ற நிகோதத்தி னிம்ப ரிருளி னிரளிருண்மே
லாற்றப் புகையள றார்மணற் கூர்ம்பர லாய்மணியே. 75

ஏழா யவைவிரிந் தெண்பத்து நான்குநூ றாயிரமாம்
போழா மவற்றப் புரையின் விகற்பமும் பொற்றொடியாய்
கீழா ரலிகண் முழுச்செவி கிண்ணர்க ளெண்ணிகந்த
வூழாம் பிறப்புமுவ் வாதமல் லாருரு வொப்பினரே. 76

விலங்கின் வகையும் விரிவன யான்சொல்ல வேண்டுதியே
லலங்கலம் பூணா யிருவகை யாமவை யென்கொலென்னின்
நிலங்களி னிற்பவுஞ் செல்பவு மாமென நிற்பனதா
மிலம்பட லின்றியிவ் வையகத் தைந்தா யியன்றனவே. 77

இயங்கு வனவு மிருபொறி யையறி வெல்லையவாய்
மயங்கியிம் மத்திம நல்லுல கத்தின மற்றிவற்று
ணயம்படு நாவின் மூக்கில நந்து முரண்முதலா
வயங்கியங் கோடிய வாயிரண்டாய அறிவினவே. 78

உண்ணி முகுட்டை எறும்பெறி தேண்முத லாவுடைய
வெண்ணில் பல்கோடிய வாயவ் விரண்டொடு மூக்குடைய
கண்ணிய மூவறி வாமவை பெற்றாற் கருணமிலா
நண்ணிய வண்டொடு தேனீ யனையவு நாலறிவே. 79

இறப்பப்பல் காலின வெட்டி னிரண்டிரண் டேயிழிந்த
பறப்ப நடப்ப தவழ்வன வூர்வன பற்பலவாச்
சிறப்புடை யிந்திய மைந்தென வந்த செவியுடைய
மறப்பில் கடலொடு தீவினு மல்கிய பல்விலங்கே. 80

வெப்பமுந் தட்பமு மிக்கு விரவிய யோனியவாய்ச்
செப்புவ செப்பில் செய்கைக ளாற்றம செய்வினையைத்
துப்பன போர்த்தும் பொடித்தும் பொரித்து முன்றோன்றுவன
வொப்பவு மொப்பிலுடம்புடம் பேகொண் டுழல்வனவும். 81

நல்லவர் தீயவர் திப்பிய ரொப்பில் குமானுயரோ

டல்லவ ருள்ளுறுத் தாடவ ரைவரு ளாதியினார்
சொல்லுக தன்மையென் பாயெனிற்சொல்லுவன் பல்வகையாற்
புல்லிய போகப் பெருநிலந் தன்னைப் பொருந்தினரே. 82

தீமா னுயர்திறந் தேற்றிடிற் றீவின் சிறுநிலத்தார்
கோமான் முதலார் குணங்களிற் குன்றிய குற்றத்தராய்த்
தாமாம் பெரிய தவந்தலை நிற்பினுந் தன்மைபெறா
ராமான் மடப்பிணை யன்னமென் னோக்கி யவரதிறமே. 83

திப்பிய ரென்னப் படுபவர் தீர்த்தந் திறப்பவரு
மப்பிய புண்ணியத் தாழிய ராழிய ரையவரும்
வெப்பிய வான் செலவ் விஞ்சையரெஞ்சலில் வெள்ளியரும்
பப்பிய ரேயவர் பான்மை வினவினும் பைந்தொடியே. 84

கோலமி னோன்றற் குமானுயர் தம்மையுங் கூறுவன்கேள்
வாலமுங் கோடும் வளைபல்லும் பெற்ற வடிவினராய்ச்
சீலமுங் காட்சியுந் தீண்டலு ரந்தரத் தீவிலுள்ளார்
நீலமும் வேலுங் கயலு நிகர்த்த நெடுங்கண்ணினாய். 85

மானுய ரென்னப் படுபவர் தாமா விதையமென்னுங்
கானுயர் சோலைக் கரும நிலத்தார் கருவினை போய்த்
தானுய ரின்பந் தவத்தாற் றலைப்படுந் தன்மையினார்
வானுயர் தோன்றல் வளர்பிறை யேசிய வாணுதலாய். 86

தூமாண் பவணர் வியந்தரர் சோதிடர் கற்பருப்பால்
வேமானியரென வைவரித் தேவர் விரித்துரைப்பிற்
றீமாண்குமரரோ டீரைவர் முன்னவ ரன்னவர்பின்
பூமாண் புனைகுழ லாய்க்கினிச்சொல்லற் பொல்லா துகொல்லாம். 87

இன்குர லார்முத லாநும ரீறா விவருமெண்மர்
பொன்பிதிர்ந் தன்ன பொறிசுணங் காகத்துப் பூண்முலையா
யென்றலு மீரிழு தாரழ லுற்றாங் கினைபவளை
நின்றிறம் பின்னறி வாமறங் கேளென நேர்ந்தனளே. 88

அந்தர வாழ்க்கையர் சோதிடர் தாங்களு மைவகையர்
சந்திர சூரியர் கோளவர் நாளவ ரல்லவராய்
மந்தர மாமலை தன்னை வலமுறை சூழ்பவருஞ்
சிந்துபு நின்றுசெல் லாதே விளங்குந் திறலவரும். 89

ஆரண னச்சுதன் சோதம னந்தமு மாதியுமாய்ப்
பாரணை நல்ல பதினறு கற்பத் தவரவர்மே (வோர்
லோரிண ராயமும் மூன்றொன்ப தைந்துக ளுள்ளுறை
வீரியர் வைமா னிகரெனக் கொண்ணீ விளங்கிழையாய். 90

இப்ப டிப்பி றவியு
ளொப்பி றீய நாரகர்
துப்ப ரிய மாதுயர்
செப்பு வாஞ் சிறிதினி. 91

ஈரி ருள்ளி னார்கடம்
பேர ளவ்வைஞ் ஞூறுவி
லோரு மோச னையவை
யூரும் வேத னையரே. 92

காள மான மெய்கடாம்
வாள வாய்க ளாற்பல
கீள வாப வாயினும்
மீளு மேனி நீரினே. 93

மல்ல வர்ம றஞ்செய்துங்
கொல்ல வாவ வல்லமெய்
பல்ல வாவு முள்ளன
சொல்ல வாவ வல்லவே. 94

பண்டை வோர்¢ யர்கடாங்
கண்டு கண்க னல்களாய்
மண்டி மாம றஞ்செய்ப
வெண்ட வப்ப லவுமே. 95

பேடி வேத னைபெரி
தோடி யூறு மாதலாற்
சேடி யாடு வன்மையிற்
கூடி யாவ தில்லையே. 96

கொன்ற பாவ மென்றுமூன்
றின்ற பாவ மென்றுதீச்

சென்று வேவ வாயினு
ணின்று கூவ வாக்குவார். 97

உண்ண வாவ நீரெனக்
கண்ண வாவ வாபவர்
நண்ண லாவ வல்லதே
ரெண்ண லாவ தில்லையே. 98

கரிவ கன்றி நின்றகம்
பொரிவ பொங்கி வீழ்ந்தழைத்
தெரிவ வின்ன மாதுயர்
பரிப வரு மில்லையே. 99

அங்கு வெங்க னலினுட்
டங்கி யுந்த லைத்தலை
பொங்கி யும்பு கைபுக
நுங்கி யுந்நு கர்வவே. 100

ஓச னைய பல்லுயிர்
வீவி னையு றவருங்
காய்சி னக்க டுவிடம்
பேசி னார்க்க ருளுணா. 101

ஓச னைய பல்லுயிர்
வீவி னையு றவருங்
காய்சி னக்க டுவிடம்
பேசி னார்க்க ருளுணா. 102

நலங்களில் பிறவியு ணஞ்சுணா ரகர்கள்பின்
விலங்கின்வே தனைகளும் விரிக்கல்வேண் டும்மெனிற்
கலங்கியொன் றொன்றினைக் கண்டுகாற் றென்னப்போ
மலங்கிநின் றும்மனம் மன்னுமஞ் சுங்களே. 103

தண்ணென்மா மழையினாற் றாமழிந் துழல்பவும்
புண்ணினா லழியமெய்ப் போரிடைப் புகுத்தவு
முண்ணல்கா ரணத்தினா லோட்டியிட் டொறுக்கவு
மெண்ணில்பல் வலையினு மிழக்குமவ் வுயிர்களே 104

வேதவா தியர்கடம் வேள்விவாய விட்டவும்
பூததே வர்கட்கெனாப் புல்லியோர்கள் கொல்லவு
மோதுநோய் மருந்தெனவ் வூட்டுதற் குரைப்பவும்
சாதலால் வரும்மிடர் தாமெனைப் பலவுமே. 105

நடுக்கமுறு நாற்கதியு ணரர்கள்படுந் துன்ப
மெடுக்கிலவை தாமிரண்டு பாகினவு மாகு
மடக்கமிலர்க் காவனவு மன்றிப்பொது வென்றும்
வடுப்பிளவு வாட்பகழி வாட்டியவொண் கண்ணாய். 106

தீவினைசெய் வாயிலொடு செற்றமனக் குற்ற
மாவினையி னாம்வெகுளி மானமொடு மாய
மோவினையிற் பற்றவல மச்சமொடு மற்று
மாவனவெ லாமடக்க மில்லவர்த நோவே. 107

இழுக்கலுறு தீக்கதியி லுய்க்குமென வெண்ணார்
விழுக்குலங்கள் மாசுபடு மென்பதனை வேண்டார்
புழுக்குலங்க ளானிறைத்த போர்வையென வோரா
ரழுக்குடம்பிற் கேகெடுவ ராடவர்க ளந்தோ. 108

மதுவொன்றுங் கோதை மலரன்ன கண்ணாய்
பொதுவென்ற நோயும் புணர்ந்திரண்டு பாகா
மிதுவொன் றிடையூ றிரண்டாய் விரியு
மதுவன்றி மெய்ப்பிணியு மூன்றா யலரும். 109

பெடையூடு சாயற் பிணையன்ன நோக்கி
யிடையூ றிரண்டு மினியாவை யென்னி
னடையா வுயிரதுவு மல்லதுவு மன்ன
நடையாய் முதலதுவு நாற்பூத மாமே. 110

பெருமழையு நீரும் பெரிதெறியுங் காற்றுங்
கருமலையுங் கல்லுங் கடுநவையு நஞ்சுஞ்
செருமலையும் பல்படையுஞ் செந்தீயும் வந்திங்
குருமிடியு மெல்லா முயிரல்ல வூறே. 111

செத்துவங்க டாக்கிச் செயிரி னணங்குதலும்
மக்கள் பலவகையின் மன்னு மலைகொலையுங்
துக்கஞ்செய் பல்விலங்கிற் றோன்று மிடையூறு

மொக்கவிவை மூன்று முயிருடைய வூறே. 112

தீர்வனவுந் தீராத் திறத்தனவுஞ் செய்ம்மருந்தி
னூர்வனவும் போலா துவசமத்தி னுய்ப்பனவும்
யார்வினவுங் காலு மவைமூன்று கூற்றவா
நேர்வனவே யாகு நிழறிகழும் பூணாய். 113

நல்லாய்நா ரின்றியே நாமுன் விரிசெய்த
வெல்லா விமையோர்க்குமென்று மிறுதி சார்ந்த
தல்லா லகன்றுன்ப மாகா நுமரன்றிப்
பொல்லா தவர்களுறு மல்லைப் புகலுறுங்கால். 114

தீயே யெனவெவர்க்குஞ் செல்லல் பலவாக்கி
வேயே புரைதோளாய் மிக்க விடமெங்கும்
பேயே யெனப்பட்டுப் பேணா தனசெய்வர்
நீயே யெனினல்லை நின்போல்வ ரன்றோ. 115

பேர்தற் கரும்பிணி தாமிவை யப்பிணி
தீர்தற் குரியதிரி யோக மருந்திவை
யோர்தற் றெளிவோ டொழுக்க மிவையுண்டார்
பேர்த்த பிணியுட்பிற வார்பெரி தின்பமுற்றே. 116

மானொத்த நோக்கிமருந் தென்றவைமூன் றினுள்ளும்
ஞானத்தி னன்மைநனி கேட்குவை யாயினக்கா
லூனத்தை யின்றியுயி ராதிய வுள்பொருள்க
டானற் குணர்தலிது வாமதன் றத்துவம்மே. 117

காண்டலு மல்லதே யளவை காண்டன்முன்
பூண்டவைம் பொறிமன மவதி புண்ணிய
மாண்டகு மனப்பரி யாயங் கேவல
நாண்டகு மரிவைய ருருவ நண்ணினாய். 118

நினைவு மீட்டுணர் வூக நேர்தரு
புனைவுசே ரணுமைபொய் யின்மை மெய்யுரை
முனைவர்தம் மாகம மொழியு மாகுமென்
றனையன காட்சியி லளவை யைந்துமே. 119

வைப்பு நயனள வைபுகு வாயிலென்றும்

பொய்ப்பி லுயிரே பொருவில்குண மார்க்கணை
செப்பி னிவற்றிற் றிரியாதுள் புகுபவாயி
னொப்பில் பெருமை யுணர்விற்குயர் மாட்சியாமே. 120

காட்சி வகைதான் கடவுண் முதலாய
மாட்சி யமைந்தபொரு ளெட்டு மனத்துவைத்து
மீட்சியில தாய்விரிந் துந்திய வின்பவெள்ள
வேட்கையது வாந்தெளி வென்றனர் வென்றவரே. 121

முந்துற்ற மூடப் புலிமூன்றும் பிழைத்த பின்னை
யன்பச்ச மாசை யுலகோடிலிங் காத்த ரொப்பு
மென்பெற்று மேத்த லிலராயெண் மயத்து நீங்க
லின்புற்ற காட்சி யுடையார்க்கியல் பாகு மன்றே. 122

ஐயுற்றல் வேட்கை யுவர்ப்பேமயக் கியாது மின்மை
செய்குற்ற நீக்க றிரிந்தாரை நிறுத்த லின்றிப்
பொய்யற்ற காதற் பொருவில்லறங் காட்ட லெட்டுங்
கையுற்ற வாயில் லதுகாட்சியின் மாட்சி யாமே. 123

நன்றாய காட்சி யுடனாகிய ஞானந் தன்னோ
டொன்றாகி யுள்ளத் தொழியாமை யொழுக்க மென்ப
குன்றாத வொன்றுங் குறைபாட்டதுங் கூறு பவ்வே
வென்றார்த நூலின் விதிமெய்ம்மை யுணர்ந்த வரே. 124

போற்றல் செறிவே பொறையாதிய நல்ல றமு
மேற்ற நினைப்போ டிருசார்வி ழுத்த வமு
மாற்றல் பரிசை முதலாகிய வன்ன வெல்லாம்
மாற்ற மறுக்கு மொழுக்கத்தின் மாட்சி யாமே. 125

யோக மிவற்றை யுடனுண்ட வுயிர்க ளெல்லாம்
மாக விசும்பி னவர்தம்மொடு மன்ன ரும்மாய்ப்
போக நுகர்ந்து பொருந்தாவினை புல்ல லின்றி
யேகநல் லின்ப மியைந்தாலிழ வில்லை நல்லாய். 126

பிறவியா மாறும் பிணியாந் திறமும்
மறவிதா னில்லா மருந்தாம் வகையும்
திறவியாள் கேட்டுத் தெரிந்துள்ளங் கொள்ள
வறவியான் றானு மறவமிர்த மீந்தான். 127

வண்டவாம் வார்குழலும் வாளெயிறும் பூண்முலையும்
தொண்டைவாய் நன்னலமுந் தோளுந் துடியிடையும்
கண்டவாங் காமுகரும் யாமுங் கணநரியும்
விண்டவாக் கொண்டுணரின் வேறுவே றாமன்றோ. 128

கரையவா வாங்குங் கயமகன் கைத்தூண்டி
லிரையவாப் பன்மீ னிடருறுவ தேபோல்
நுரையவா நுண்டுகிலு மேகலையுஞ் சூழ்ந்த
வரையவாய்ப் பட்டார்க்கு மாழ்துயரே கண்டீர். 129

மட்டார் மலர்புனைவும் வாணெடுங்கண் மையணிவும்
பட்டார் கலையுடையும் பல்வளையும் பைந்தோடு
நட்டாரை யெல்லா நரகுக்கே யுய்க்கு நாய்க்
கொட்டார்த்தார் செய்யும் கோலங்கள் வண்ணம். 130

ஆடினாய் நான மணிந்தாய் கலன்மாலை
சூடினா யேனுஞ் சுணங்கார் வனமுலையா
யூடினா யாக வொழுக் கூற்றைப் பல்பண்டம்
மூடினாய் தோலின் முகமனுரை யேனே. 131

மின்போ னுடங்கிடையும் வேயேய் திரடோளு
மென்றே யிவை மகிழ்ந்தீங் கென்முன்னே வந்தாயாற்
புன்றோலும் பல்லென்பும் போர்த்த புறங்காட்டு
ளன்றே யுறைவ னவற்றான் மருள்வேனோ. 132

மெழுகுருகு மண்பாவை மேதையான் காய்த்தி
யொழுகுருகு செம்பொன்னா லுண்ணிறைந்த தேபோல்
புழுகுருகு மெய்காட்டிப் பொல்லாத போக்கி
யழகுருவு கொண்டா ளறவமிர்த முண்டாள். 133

காய்வ செயினுங் குழவிக்கட்கவன்று கழிகண் ணோட்டத்தாற்
றாய்தன் முலையி லமுதூட்டுந்தகைய னறவோன் றானென்று
மாய வுருவ மாறித்தன்மற்றை யுருவ மேகொண்டு
பேயேன் செய்த பிழையெல்லாம்பெரும பொறுவென் றிறைஞ்சினான். 134

முழங்கு முந்நீர் வையத்து முனிதக் கார்தம் முன்னின்று
வழங்க வாட்ட மொழிவர்நமன்னும் பொறாத வகையுண்டோ

வழுங்க லென்ற வறவோன்றனலர்கொள் பாதம் பெரிதேத்தித்
தொழுங்கை யாளக் குணக்குன்றைத்துதிப்ப னென்று தொடங்கினாள். 135

வெள்ள மாரி தரித்தோய்நீவினையின் வாயி லடைத்தோய்நீ
யுள்ள மாட்சி யுடையோய்நீயுயப்போம் வண்ண முரைத்தோய்நீ
நள்ளென் யாமத் தியான்செய்தநவைக ளெல்லா நனிகண்டு
மெள்ள லில்லாப் பெரியோய்நின்னிணையில் பாத மணைவல்யான். 136

மூட மூன்று முரைத்தோய் நீமுரண்செய் தோற்ற முனிந்தோய் நீ
வீடுங் கட்டும் விரித்தோய் நீவினையி னின்பம் வெறுத்தோய் நீ
காடு கிளர்ந்து காட்டியான் கலக்க வொன்றுங் கலங்காத
பாடற் கரிய பெரியோய்நின்பழிப்பில் பாதம் பணிவல்யான். 137

அல்லற் பிறவி யகன்றோய்நீஆசை வெவ்வே ரறுத்தோய்நீ
வெல்லற் கரிய வனங்கனைமெய் வெண்ணீ றாக வெகுண்டோய்நீ
கொல்லக் கருதி வந்தேனைக்குணங்க ளாலே வணங்குவித்த
சொல்லற் கரிய பெரியோய் நின்றோமில் பாதந் தொழுவல்யாள். 138

உடம்பின் மெய்ம்மை யுணர்ந்தோய்ந Ѣயுறங்க லார்வ மறுத்தோய்நீ
யிடங்கொ ளின்னா வினையெல்லா மெரிக்கும் வாயில் விரித்தோய்நீ
யடங்க லில்லேற் கருளினாலறங்கூர் மாரி பொழிந்தோய்நின்
றடங்கொள் செந்தா மரையடியென்றலைய வேயென் றலையவே. 139

தடம்படு மாரி தலைத்தலை நூற
விடம்படு பல்லுயிர் மெய்வழி யேற
வுடம்பொடு வேறெனு மோர்ப்பினை யாகி
யடங்கிய நின்னடி யஞ்சலி செய்வேன். 140

கல்லுரு கக்கடுங் காற்றெறி போதினி
னல்லிருள் கூர்சுடு காட்டிட மாகப்
பல்வினை யும்பறிப் போய்நின் பாதம்
நல்வினை யிற்றொழு வேனினி நாளும். 141

மங்குன் மழைபொழி மாரிபெந் நாளிற்
கங்குலெண் ணில்லங் கவலைசெய் காட்டு
ளெங்கு மியங்கல னென்றிருந் தோய்நின்
பங்கயம் போல்வன பாதம் பணிவேன். 142

இற்றவர் தம்முட றின்றிட யாமம்
முற்ற நரிமுர லும்முது காட்டுட்
பற்றற வேநினை வோயிரு பாதம்
சுற்றுபு யான்விதி யிற்றொழு வேனே. 143

திண்டிறல் சேர்சிறு பேயறை கீறி
வெண்டலை யால்விளை யாடிய காட்டு
ளெண்டுக ளும்மெரிப் போய்நின பாதம்
வண்டறை பூவொடு வந்தனை செய்வேன். 144

பிணங்க ளிடையிடை போரழ லீமத்
தணங்கு துணங்கைசெய் தாடிய காட்டுட்
குணங்க ளுடையன குன்றுத லில்லாய்
வணங்குவ னின்னடி வைகலி னாளும். 145

நுனித்தகு நன்னெறி நோக்கின ளாகி
முனிப்பிறை யோனடி மும்மையி னேத்திப்
பனிக்கட லன்னதொர் பாவமுஞ் செய்தே
னினிச்செய்வ தென்னுரை யாயெனக் கென்றாள். 146

விலங்கு வெந்நர காதிக டம்முள்
விளிந்து தோன் றிவிழு நோயொடு முற்றுக்
கலங்கி யெங்குங் கண்ணில வாகிக்
கவலைவெள் ளக்கட லிற்குளித் தாழு
நலங்களில் லாவுயிர் தங்களுக் கெல்லா
நடுக்கநீக் கியுயர் நன்னிலை யீயுஞ்
சலங்களில் லாப்பெரி யோன்சரண் கொண்ணீ
சனங்கட் கெல்லா மவன்சர ணென்றான். 147

உய்தல் வாயுரைத் தாயதன் மேலு
முயிருள்ளிட் டபல வுள்பொருள் சொன்னாய்
நைதலில் லாத்தெளி வோடுநன் ஞான
நானுங் கொண் டேனுன் னற்குண மெல்லாம்
பெய்துதந் தாய் பிழைத் தேற்கினி தாவோர்
பிராயச்சித் தம்பெரி யோயரு ளென்னச்
செய்த தீமை கெடக்கட னாட்டிற்
சினவ ரன்னெறி யேதெருட் டென்றான். 148

யாஅ தடிக ளதருளா லருந்துய ரகல்வகை யதனான்
மாஅ துடைஅடி யிவைதா மறவலெ னெனவலங் கொண்டு
வேள தடவியன் மலைமேல் விரிகதிர் மணிவிளக் காதி
தீஇ தடுதலை விலங்குஞ் சினகர முவகையிற் சென்றாள். 149

---------

## 3. குண்டலகேசி வாதம் (150-231)

கொல்லை முல்லைபைங் கோங்குருந்தங் கோடறண் குரவ
நல்ல மல்லிகை நறவம்ஞாழல் தாழைபுன் னாகம்
பல்லி தழ்ப்பனிக் குவளை பானல் பாதிரி பிறவு
மெல்லை யின்மல ரேந்தி றைவன திடவகைக் கெழுந்தாள். 150

நீட்சி யோக்கமோ டகலநினையநின் றெங்கணு நோக்கி
மாட்சி யால்வலங் கொண்டுமாதவத் திறைவனிற் பிழையாக்
காட்சி யேனெனி லெல்லாக்கதவமுந் திறக்கெனத் திறப்ப
வாட்சி மூவுல குடையவடிகட மடியிணை தொழுதாள். 151

அத்தி யாளியோ டாமானட்ட மங்கல மரிய
பத்தி பாவைபல் பறவைபயில்கொடி திமிசொடு பிறவும்
வித்த கம்பெரி துடையவசித்திர வுருவநன் மலராற்
சித்த நன்னெறி பயந்தான்திருவடிக்கு அருச்சனை செய்தாள். 152

தூமஞ் சாந்தொடு சுண்ணந்துதியொடு பரவுபு தொழுதே
தாமந் தாழ்தர நாற்றித்தத்துவ தரிசிய துருவே
யாமென றையென வியந்தாங்கன்ன வாயிரத் தோரெண்
ணாம நல்லிசை தொடுத்துநாதகீ தங்களை நவிற்றும். 153

கன்று காலனைக் கடந்தாய்காதற் காமனைக் கடிந்தாய்
தொன்று மூத்தலைத் துறந்தாய்தோற்ற மாக்கட லிறந்தா
யொன்ற நோய்பகை யொருங்கே யுடைந்து வெங்களத் துதிர
வென்றி ருந்தனை நீயே வீரர்தம் வீரர்க்கும் வீரா. 154

சாத னோய்சரை பிறவிதாஞ்செய் திவினைக் கடலுண்
மாது யருழந் துறுநோய்மறுகு மன்னுயிர்க் கெல்லாந்
தீதி னன்னெறி பயந்துதிரைசெய் நீள்கரை யொருவிப்
போத ரும்புணை படைத்தாய்புலவர்தம் புலவர்க்கும் புலவா. 155

அரிய வாயின செய்திட்டமரர் துந்துபி யறைந்து
புரிய பூமழை பொழியப்பொன்னெயில மண்டிலம் புதைந்த
விரிகொ டண்டளிர்ப் பிண்டிமரநிழ லிருந்திரு வினையும்
பிரியும் பெற்றியை யுரைத்தாய்பெரியவர்ப் பெரியவர்ப் பெரியாய். 156

பொங்கு சாமரை யேந்திப் புடைபுடை யியக்கார்நின் றிரட்டச்
சிங்க வாசனத் திருந்துதெளிந்தொளி மண்டில நிழற்றத்
திங்கண் முக்குடை கவிப்பத்தேவர்தந் திருந்தவை தெருள
வங்க பூவம தறைந்தாயறிவர்தம் மறிவர்க்கு மறிவா. 157

ஊறி யாவது முணராயுறல்வகை யிதுவென வுரைத்தி
கூறு வேனெனக் கூறாய்குரன்முர சனையதோர் குணத்தை
செற லுள்ளமு மில்லையாய்த்திருமலர் மிசையடி யிடுதி
தேறு மாறென்னை நின்னைத்தேவர்தந் தேவர்க்குந் தேவா. 158

கண்ணி னாலொன்றும் காணாய்காணவு முளபொரு ளொருங்கே
பெண்ணு மல்லவுஞ் சாராய்பிரிதலில் போஏ்ன்ப முடையை
யுண்ணல் யாவது மிலையாயொளிதிக ழுருவம• துனதா
லெண்ணில் யார்நினை யுணர்வா ரிறைவர்தம் மிறைவர்க்கு மிறைவா. 159

சொற்றி யாவதுங் கேளாய்சுதநயந் துணிவுமங் குரைத்தி
கற்றி யாவது மிலையாய்க்கடையில்பல் பொருளுணர் வுடையை
பற்றி யாவது மிலையாய்ப்பரந்தவெண் செல்வமு முடையை
முற்ற யார்நினை யுணர்வார்முனைவர்தம் முனைவர்க்கு முனைவா. 160

அன்மை யாரவர் தாந்தாமறிந்தன வுரைத்த பொய்யாக்கி
நின்மெ யாகிய ஞானநிகழ்ச்சி நீவிரித் துரைத்த
சொன்மை யாரிடை தெரிந்தார்தொடர்வினை முழுவதுஞ் சுடுநின்
றன்மை யார்பிற ரறிவார்தலைவர்தம் தலைவர்க்குந் தலைவா. 161

ஆதி யந்தளப் பரிய அருகந்த பகவர்த மறஞ்சால்
சேதி யம்புக்க வர்தந்திருந்தடி களைப்பெருந் துதிசேர்
போதி யிற்பணிந் திருந்தாள்புன்னெறி தாம்பல வவற்றுள்
யாதுகொ றான்மு னென்னாலடர்க்கற் பாலது வென்றாள். 162

ஊன்றின்ற லிழுக்கென்னானுயிரினையு முளதென்னா
னோன்றலையு நோன்பென்னானோக்குடைய கணிகையரே
போன்றிருந்து பொதியறுக்கும்புத்தன்றன் புன்னெறியை

யான்சென்ற• தடிப்படுப்பறைக்கரும மிதுவென்றாள். 163

மண்டலத்தி னோக்குவாள்யடுத்தன தவதியால்
கண்டனடான் காம்பிலிக்காவலன் கடைமுகத்தோர்
தண்ட¨¡ய பொழில்நாவற்சாகைநட் டுரைபெறாக்
குண்டலகே சிப்பெயரைக்குறியாக வேகொண்டாள். 164

தருமத்திற் றிரிவில்லாடயாச்செய்தற் பொருட்டாக
நிருமித்த வகையினதாநெடுநகரை வலஞ்செய்து
திருமுத்தப் பீடிகைக்கட்சித்தரையுஞ் சிந்தித்தோர்
பெருமுத்தப் பெண்ணுருவங்கொண் டியைந்த பெற்றியளாய். 165

அந்தரமே யாறாச்சென்றழனுதிவே லரசர்கட்
கிந்திரனே போன்றிருந்தவிறைமகன திடமெய்திக்
கந்திருவ மகளேன் யான்காவலனைக் காண்குறுவேன்
வந்திருந்த துரைவிரைந்து வாயிலோ யெனச்சொன்னாள். 166

கருங்களிறுங் களிமாவுங் கந்தோடு பந்தியவே
நெருங்குபுபோய் நீருண்ணாதேர்பண்ணா நெடுங்கடைக்குப்
பெரும்படையுஞ் சாராதிப் பெண்பாவி மரநட்டிங்
கிருந்ததன் றிறத்தினாலெனக்கரிது புகலென்றான். 167

வாயிலோ னுரைகேட்டு வடிக்கண்ணாண் முகநோக்கி
கோயிலையான் புகவிலக்குங்குறையென்னை முறைதிருத்தும்
பூசலிங் குடையையோபொருளிழவோ வுயிரிழவோ
நீயிலையார் புதனடற்குநிமித்தமிங் கென்னென்றாள். 168

என்கருமம் வினவுதியேலிலிங்கியரு ளென்னோடு
நன்குரைப்பார்த் தரவ்வேண்டிநாவற்கொம் பிதுநட்டே
னுன்கரும நீ செய்வாய்நுழைந்தறிவு முடையையேல்
மன்பெரியான் றிருந்தவையுண்மாற்றந்தா வெனச்சொன்னாள். 169

அப்படித்தே யெனின்வாயிலடைப்பொழிக யானைதே
ரெப்படியு மியங்குகநும்மிறைமகற்கு மிசைமினென்
றிப்படியா லிவையுரையாவிலைநாவ லிறுத்திட்டா
டுப்போடு கனிதொண்டை துயில்கொண்ட துவர்வாயாள். 170

வேந்தனு மதுகேட்டே விம்முயிர்த்த வுவகையனாய்ப்

பூந்தடங்க ணல்லார் புகுதுக வெனப்புகலும்
போந்திருக்க வெனவிருக்கை பொருந்திய வாறவர்கட்
கீந்துலகத் தியற்கையு மினிதினிற் செய்திருந்தான். 171

முதலவனோ டவனூலுமந்நூலின் முடிபொருளு
நுதலிய பொருணிகழ்வுந்நுங்கோளு மெமக்கறியத்
திதலைமா ணல்குலீர்தெருட்டுமி னெனச்சொன்னா
னதலையும் பெருங்கதவமடைப்பொழித்திட் டலைவேலான். 172

நன்றாக வுரைத்தனைநீநரதேவ நின்னவையுள்
வென்க்கோர் விழுப்பொருளும்தோற்றார்க்கோர் பெரந்துயரும்
ஒன்றாக வுரையாக்காலுரையேன்யா னெனச்சொன்னாள்
குன்றாத மதிமுகத்துக்குண்டலமா கேசியே. 173

அறத்தகைய வரசனுமதுகேட்டாங் கவர்க்குரைப்பான்
சிறப்பயர்வ னன்றாகவென்றார்கட் கின்றேயான்
புறப்படுப்பன் றோற்றாரைப்பொல்லாங்கு செய்தென்றாற்
கிறப்பவும் பெருதுவந்தாரிலங்கிழையா ரிருவருமே. 174

வேனிரைத்த விரிதானைவேத்தவையார் வியப்பெய்தக்
கோனுரைத்த வுரைகேட்டே குண்டலமா கேசியுந்
தானுரைத்தாள் தான்வேண்டுந்தலைவனூற் பொருணிகழ்ச்சி
தேனிரைத்த கருங்குழலா டானும்பின றெருட்டினாள். 175

ஆதிதான் பெரியனாயறக்கெடு மளவெல்லா
மூதியமே யுணர்ந்தவனுறுதரும மேயுரைத்தான்
யாதனையுந் தான்வேண்டானயலார்க்கே துன்புற்றான்
போதியா னெம்மிறைவன்பொருந்தினா ருயக்கொள்வான். 176

முந்துரைத்தான் முந்நூலு மந்நூலின் முடிபொருடா
மைந்துரைப்பி லுருவுழப்பறிவோடு குறிசெய்கை
சிந்தனைகட் செலவோடுவரவுமே நிலையில்லை
தந்துரைப்பி னெரிநுதிபோற்றாங்கேடு நிகழ்வென்றாள். 177

சொல்லியவந் நான்மைமேற்றுணிவினையுந் தான்பெயர்த்து
நல்லவையை மனங்கொளீஇநான்மையின் முதல்வைத்த
வெல்லையில் குணத்தலைவரிலக்கணமென் றெடுத்ததன்மேற்
பல்வகைய பெருங்குற்றம் பதம்பதமாயக் கேளென்றாள். 178

1முன்னெனப் படுவதுதான்முதலில்லாத் தடுமாற்றம்
அன்ன தன்கட் பெரியனேலறங்கொண்ட தவமாகும்
பின்னதன்கட் பெரியனேற்பிறழ்வெய்துங் காலச்சொ
லென்னென்றான் பெரியவாறிருமையினுந் திரிந்தென்றாள். 179

பெருமைமுன் பெற்றனனேற்பின்னைத்தான் முடிப்பதோர்
கருமமிங் கெவனாகுங்காட்டுதியேற் பெற்றிலன்முன்
றருமந்தான் கருதிநீசொன்னாயேற் றலைவரே
யொருமையா லறந்தெளிந்தவுழப்புலையர் முதலானார். 180

தான்கெடினுந் தக்கார்கே டெண்ணற்க வென்பதனை
யூன்கொடுமை யுரைத்தான்•துணர்ந்திலனே யாகாதோ
தான்கெடு மளவெல்லாநினைந்துரைத்த தத்துவந்தான்
மான்கடியு நோக்கினாய்வழியறக்கெட் டொழிவதோ. 181

வழிவாழக் கெடுகின்றார்மாந்தருள் மேலாயார்
பழிபாவ மோராதான்பற்றினார்ப் பாழ்செய்வான்
ஒழிபாவி தலைவனென்றுரைப்பதனை யுலகத்தார்
கிழியோடு மாறாக்காசென்றான்சொற் கேட்பவோ. 182

நுனைத்தலைய நுண்மயிரைநுனியுறீஇ விதிர்த்திட்டா
லனைத்துணைய தடங்கலுமறக்கிடந்த பிறந்துழப்பு
நினைக்குங்காற் பிறர்க்கேயாமென்றியா னீயன்னா
யனைத்துணைய பெரும்பாவமவன் செய்தா னாகானோ. 183

துன்பந்தான் றீவினையின் வழித்தோன்றுந் துன்பேயா
மென்பதனை நுமரேடீ யெப்பொழுது முரைப்பவாற்
பின்புந்தான் பிறர்பிறர்க்குப் பிறந்துழப்பே யாக்கினா
லன்பினான் முன்செய்த தருவினையே யாகாதோ. 184

தனக்கொன்றும் பயனின்றித்தளையாளென் றான்வருந்தி
யெனைப்பெருங் குப்பையுமெருச்சுமப்பாற் கண்டக்கால்
நினைப்பதொன் றுடைத்தவன்செய்நெடும்பாவ நிச்சலும்
மனக்கினிதா வவன்றன்னையாள்வார்மாண் புரையாயோ 185

அவ்வகையா லுழக்கின்றா னயலார்கள் படுகின்ற
வுய்வகையில் போ¢டரையொழிப்பதன் பொருட்டாக

விவ்வகையா லருள்செய்யு மென்பதனை யெடுத்துரைத்தாள்
கொவ்வையந் துவர்ச் செவ்வாய்க்குண்டலமா கேசியே. 186

அருளினாற் பிறர்க்குழக்குமனனென்ற வவ்வுரையைப்
புரளல்நீ பிறப்பொழியும்பொழுதின்க ணவ்வருளைப்
பொருளன்மை கண்டானோபுற்கலர்தா முலர்ந்தாரோ
தெருளநீ யுரைத்துக்காண்டிருந்தவையா ரிடையென்றாள். 187

ஊடுபுக் குயிரடுந் துயரந்தா னொழிக்கின்றான்.
வீடுபெற் றிறந்தனனேல் விளிகவன தருள்பாவி
யோடுகிற் றிலனொன்றுந் தாதையையே யுழப்பித்தோ
னாடைபற் றெனவுரைத்த வவன்போன்றா னாகாதோ. 188

அங்கிருவ ருளரன்றோ வறப்போக்கிப் போவாரென்
றிங்கிருந்து நீயஙரைத்தா லிவனருள்யார் தெளிகிற்பார்
அங்கிருவ ருளரெனினு மவரின் முன் னவையீரே
நங்கரும முலைப்பித்து நாம்போது மெனநக்காள். 189

முன்கொன்றான் றன்றாயைமுழுமெய்யும் போர்த்திருந்து
தின்கின்றான் பிணம்வீடுந்தெருட்டுங்காற் சூனியமே
யென்கின்றா னிவன்போல்வாரிறைவரில் லெனவுரைப்பாய்
தன்கன்று சாக்கறப்பான்றயாப்பிறிதிற் குடையவனோ. 190

191 கண்ணொடுகா திவையிலள்கரந்தன முலையிரண்டு
முன்னும்வா யுதட்டோடுமூக்கில ளூறுநோய்த்தி
பெண்ணழகிற் கிவள்பிறராற்பேசவும் படுவாளோ
எண்ணுங்கா லென்பேதையெனவுரைக்கு மவனொத்தாள். 191

பருவரலொன் றிலன்றாயைப்பழுப்பறித்தான் தலைவனிவள்
கருவரைமேற் றன்கணவன்காலனையுங் கவிழ்த்திட்டாள்
இருவரையும் போல்வாரிவ்விருநிலத்தின் மேலெங்கும்
பெருவழியார் பேரருளார்பிறர்யாரே யெனநக்காள். 192

ஒண்ணுதலா யுன்றலைவனொழிவின்றி யுணர்கலான்
கண்முதலா வுரையவிக்கருவியிற் கண்டுகேட்
டெண்ணியு முணர்தலாவிலைசுமக்கு மொருவன்போ
னுண்ணுணர்வு தனக்கில்லானுரைத்ததுதா னூலாமோ. 193

ஐங்கந்த மெனல்பிழைப்பா மறிவினின்வே றாதலாற்
சிங்குந்தன் குறியுழப்புச்செய்கையென் றிவைமூன்று
மிங்கொன்று முருவினோடிரண்டென்னாய் மிகவுரைத்தாய்
சங்கந்தா மல்லவேற்றத்துவமுந் தலைப்பட்டாய். 194

முன்னைத்தன் முழுக்கேடுமுழுக்கேட்டின் வழித்தோன்றும்
பின்னைத்தன் பிறிதறிவும்பெயர்த்துரைத்தல் பெரும்பேதாய்
என்னொக்கு மெனினெருநலிற்புகுந்தா னிடையிராத்
தன்னைத்தந் தெனைக்கொண்டுதான்சென்றா னெனலன்றோ. 195

கள்ளனுந் தானேயாய்க்கையாப்புண் டவனேபோ
லுள்ளந்தா னின்றவற்றை யுணர்ந்தவற்றோ டறக்கெட்டிங்
கெள்ளனைத்து மில்லென்றாலிறப்பறித லெவனாகுந்
தெள்ளியாய் தெளிந்திருந்துசிந்தித்துக் காணாயோ. 196

கோன்பட்டான் குந்தத்தாற்கத்துண்டா னேனாதி
தான்பட்டான் றளவீரன்தப்பியோ டவனருகே
யான்பட்டே னென்பவன் போல்யாத்திருந்தே சொல்லுதியால்
தான்பட்டான் பட்டார்க்குத் தன்பாட்டை யுரைக்குமோ! 197

பிறைப்பிறப்பும் பிள்ளைகடம்பிறப்பினையு மெடுத்துரைப்பின்
மறைபொருள்கள் வெளிப்பட்டாமன்னுந்தாங் கருதுபவால்
குறையென்னை வான்வயிற்றாற்குண்டலமா கேசியித்
தறையகத்துப் பிறப்புரைத்தாள்றத்துவமாக் கொள்வாமோ. 198

பின்னசந் தானமும் பிறிதில் சந் தானமு
மின்னவென் றிரண்டுரைத்தெத்துணையோ பொழுதோதிச்
சொன்னதன் பொருளெல்லாஞ்சுவடின்றி யறக்கெடுத்தற்
கன்னதே யெனிலாதனாழிநாட் டாகாதோ. 199

எண்ணிலாப் பலகந்த மிடையறா வென்றுரைப்பிற்
கண்ணுறா தொன்றுதலாற்கலப்பிலவா மாகவே
திண்ணிதா மிடையறவுதீண்டுமேற் றிரண்டொன்றா
அண்ணறான் முடிந்தறக்கே டரியதே போலுமால். 200

வாசனையி னாமெனினும் வழியதனின் முதலதொன்
றாசனைத்து மில்லையே லறிந்துரைப்பு மரிதரோ
பேசினைநீ உளதெனினும் பெருந்தாமத் துண்ணூல்போல்

லோசனையி னெடியதோ ருயிருரைத்தா யாகாயோ. 201

பாதிரிப்பூப் புத்தோடு பாழ்ப்பினுந்தான் பல்வழியும்
தாதுரித்தாங் கேடின்மை யென்பதுநுன் றத்துவமோ
போதுரைத்த வோடுநீர் போலுடம்பு பொன்றிடினும்
மூதுரைத்த வாசம்போன் முடிவுயிர்க்கே யாகாதோ. 202

சத்திதான் சென்றதே யென்றியே லைந்தன்றிப்
பொத்திநீ யுரைக்கின்ற பொருளோடா றாகாவோ
சத்திதா னதுவன்றி யைந்துமே யாயினும்
பித்தியாய் முழுக்கேடு பேசினா யாகாயோ. 203

அலைபலவே யுரைத்தாளென்றருகிருந்தோர் கருதுதலுந்
தலைவனூல் பொருணிகழ்ச்சிதங்கண்மேற் குற்றங்க
ணிலைபெற வுரைத்தின்மைநிறுத்துவன்யா னென்றுதன்
தலைவனீ பொருள்களேதானாட்ட லுறவினால். 204

கண்கொடுத்தான் றடிகொடுத்தான்கயப்புலிக்குத் தற்கொடுத்தான்
பெண்கொடுத்தா னுடம்பினையும் பிளந்திட்டுப் பிறர்க்கீந்தான்
மண்கொடுத்தான் மகக்கொடுத்தான்மன்னுந்தற் சேர்ந்தார்க்கு
விண்கொடுத்தா னவன்கொடுத்த விரித்துரைப்பன் கேளென்றாள். 205

ஏதி லாரிடர் தீர்க்கு மெமவிறை
சாத கம்மிவை யென்று தலைத்தலை
யோகி னாணின் றொருபக லெல்லையுங்
கோதை வார்குழற் குண்டல கேசியே. 206

நூலு நாரு மிசைத்தன வொத்தலா
னீல கேசி நெடுங்க ணாள்சொல்லு
மாலும் பேயு முடையவர் செய்கையே
போலு நீ சொன்ன புத்தர் சரிதையை. 207

போழுங் கண்ணுந் தலையுந் தடிகளுந்
தாழ மின்றி யிவைதம்மி னோவென
வாழு மாந்த ருழைவரு வாரில்லை
கூழன் றன்னுழை யேகொளச் செல்பவோ. 208

பிளத்த லுள்ளிட்ட வாய்ச்செல் வதிந்திர

னளத்தற் கேலவன் றானறி யும்பிற
னுளத்தை யோரல னேலவன் றேவனாக்
கிளத்த றானோர் கிழமையும் போலுமே. 209

யாவ னாயினு மன்னவ னின்மையிற்
றேவ னென்று தெளியுந் தெளிந்தபின்
சாவ னென்பதோர் சங்கைய மின்றியே
யீவ னென்பதோ ரிச்சையுந் தோன்றுமே. 210

உறுதி யல்ல துணர்வடையான்றனக
கிறுதி யேலென்று மிந்திர னெண்ணலன்
மறுதி யின்மையின் மாணிழை நீயெங்குப்
பெறுதி முன்னெடு பின்னியை யாதவே. 211

ஆத னாற்குறந் தாங்கெழு வான்றும்ம
வேத மில்சுட ரேற்றொரு தாமென்றான்
சாத கம்மிவற் றானருள் சாதிப்பா
னோதி னார்க்கு முணர்வொருப் பாயதே. 212

எருது பாலின்மை யெண்ணலன் றும்மலே
கருது மாதனுங் கண் முத லாயின
தருத லல்லது தங்குறை யீதெனார்
மருதின் வாழ்பகை யானவிம் மாந்தரே. 213

பாக மேபிளந் தாற்பர காயமொன்
றாகு மேயென வீவ• தாதன்மை
காக மேயுண்ணுங் கண்ணுமற் றன்னதே
யேக மெய்யும்விண் டாலியை யார்களே. 214

உள்ளந் தானிரு பாகினு முண்மையாற்
கொள்கின் றானிவ னேகொல்லு வான்றனை
யெள்ளி நேரு மறிவில்லை யேற்பிணங்
கொள்ளென் றீர்ந்து கொடுப்பினுங் கூடுமோ. 215

கூறு கூறுசெய் தாலுடம் புள்ளுயிர்
வேறு வேறு செலல்வெளி றாக்கொளாய்
பாறு வாயுரைக் கும்பர மாத்தங்க
டேறு வாருள ரோதெருண் டார்களே. 216

புத்த னார்வண்ணங் கண்ட புனையிழை
சித்த னேயென்னைச் சேர்மின மென்றலி
னத்த கன்னருள் செய்கல னாய்விடின்
மத்த கம்பிளந் தானென்றன் மாயமே. 217

ஆவ தின்மை யறிந்து மவத்தமே
சாவ தேயுங்கள் சத்துவர் சால்பெனிற்
காவல் பூண்ட கணவனோ டீமத்தின்
வேம வட்கும் விழுக்குண மாங்கொலோ. 218

சாந்தி யாகத் தரும முரைப்புழிக்
காந்தி பாவியைக் கண்டு கலகன்றா
னேந்தி வெம்படை யாலெறிந் தாற்கிடம்
போந்து கொண்டதும் பொய்யினுட் பொய்யன்றோ. 219

யானை யுள்ளா செங்குள தங்கெலாம்
வான நின்று வழிபடல் காண்டுமான்
மீனு மல்லவும் வேதனை யெய்துழித்
தான தாதற்றா தாகதர் தன்மையோ. 220

குரங்கு மாயவை கொல்லிய செல்வழி
யிரங்கி யேயுயக் கொண்டது மென்றியாற்
குரங்கு நேர்குதி யாக்குரங் கெங்குள
மரங்கள் பாய்ந்திடு மாண்பின வல்லவோ. 221

சீல நல்லவர் நீள்குவர் சேணெனிற்
கோல மில்குரங் காட்டிக் கொல் வார்களைக்
காலுங் கையு மெழற்கெனக் காண்கிலான்
வாலை நீட்டிக் கிடத்தறன் மாட்சியோ. 222

தாய்க்கொன் றான்றங்கு செங்குரு திப்புனல்
பேய்க்கொன் றீதல் பெருங்கொடை யென்பதை
வாய்க்கின் றாயினி மானுயர் மாசெலா
நாய்க்கென் றாலிது நல்லற மாங்கொலோ. 223

யான்செ யும்பொரு ளென்றங்கொ ரேகாந்தன்
தான்செய் திட்டனன் சாதக கற்பங்கள்

மான்செய் நோக்கி மதிப்பொழி நீயெனக்
கோன்சொ னானிது குண்டல கேசிக்கே. 224

முயலுரை யிதுவெனெ மூடிக் கொண்டிருக்ந்
தயலார்க் குரைப்பவ ராத ரல்லரோ
புயலிருங் கோந்தலி பொருந்தச் சொல்லினாள்
வியலவ ருரையொடு விரோத மில்லையே 225

அரசிறை யிட்ஜுசொலவவை நார்களு
முரைசெறி வுடையன வுரைத்த நீர்மைபூண்
முரைசொடு நெடுங்கொடி முலூங்க நாட்டுக
விரைவொடு படுகென வேந்த னேயினான். 226

இருப்பதென் னினியன்னா யிதுநுமக் குரைத்தார்யார்
சும்க்கினைக் கடிதாகச் சொல்லெளுக் கெனலோடுக்
திருக்கிளர் மதிலுஞ்சை தென்றிசை யகனகரு
ளம்க்கசந் திரனென்னு மவாச்சிய னெளுச்சொன்னாள் 227

கட்டுரை பலசொல்லிக் காவல் நெடுங்கடை நாவலைமுன்
னட்டிவ ணகரிடை நகைசெய்து புகுந்தவிந் நன்னுதலை
வட்டிகொள் பறைகொட்டி வழுவுரை பலசொல்லி (வாரலென்று
பெட்டன பலசெய்து பெருநகர் வாயிலைப் புறப்படுத்தார். 228

புனத்திடை நறுமலர்ப் பூங்கொடி யன்னதோர் பொற்பினளாய்
எனைப்பல நூல்களு மியல்பினி னறிபவ ளேதமில்லாள்
தனக்கினி யான்செயற் பாலதுதானென்னை யெனவுரைத்தான்
இனத்தகை யேற்றரி யிடியுறுமேறெனு மிவற்றை யொப்பான். 229

ஆண்டகை அரசிறை அதுசொல்லக்கேட்டவவ் வறத்தகையா
டீண்டல னணிபிற புனைவெனுநினைவிலன் றினையனைத்தும்
வேண்டல னிலனொடு விழுநிதியினையவும் விறற்றகையா
யீண்டினி யறநெறி யுறுகெனவேந்திழை யியம்பினளே. 230

வந்தது மிதுபொருண் மன்னவயானென நன்னுதலா
ளிந்திர னனையநின் னிறைமையினறநெறி யிகழலென்றாங்
கந்தர நெறிசெலற் காயிழையரசனை விடுத்தருக்க
சந்திர னிருந்தவத் திசைமுன்னித்தளிரிய றானெழுந்தாள். 231

----------

## 4. அர்க்க சந்திர வாதம் (232- 266)

உஞ்சை மாநக ரெய்தின ளாயத
னிஞ்சி மாட்சியு மெல்லையில் செம்மலு
மஞ்சு தோய்நெடு மாடமும் வீதியு
மஞ்சி லோதி யவையவை கண்டபின் 232

பருக்கை மால்களி யானைப்பல் வேந்தரு
மிருக்க போதக வென்னும் பெருமையான்
றருக்க நீட்டமுந் தன்னிக ரில்லவ
னருக்க சந்திர னென்னு மவாச்சியன். 233

போதி சத்துவர் புத்த ரெனப்படு
நீதி யிற்பெரி யாரன நீ¡;மையா
னோதி நூன்மும்மை யொப்ப வுணர்ந்தவன்
வாதி கட்கோர் வயப்புலி யேறனான். 234

மாடமோங்கி மழைநுழைந் தின்குயில்
பாடு பூம்பொழிற் பாங்கரோர் பள்ளியுட்
பீட மேறிப் பெருந்தகை யார்க்கெலாம்
வீடு பேறும் வினையு முரைப்புழி. 235

சென்று தானெய்திச் சிற்பிடத் தாற்புக்குத்
துன்று நீண்மணித் தூணணிந் தெண்ணென
நின்று நீலவைம் பாற்பெய ராளுமங்
கொன்று பல்வகை யோத்துரை கேட்டனள். 236

கொள்ளு மாறுந்தன் கோரகை யுட்கஞ்சி
மொள்ளு மாறு முதுகு நெளித்துண்டு
னள்ளு மாறு மணலெடுத் திட்டவை
மெள்ள மெள்ள விழுங்கு மவைகளும். 237

வழிக்கு மாறுந்தம் மண்டையி னுண்டுமன்
ஒழிக்கு மாறும தூட்டு மவைகளும்
மழிக்கு மாறுந் தலைகளை மையிட்டு
விழிக்கு மாறும் வினைய விதியினால். 238

இனைய வேசொல்லி யிட்ட தலையராய்
வினைய நூலை வியப்பெய்து வார்க்கெலா
மனைய தேநு மறநெறி யென்றனள்
முனைவன் றன்னெறி முன்ன முணர்ந்தவள். 239

அவ்வு ரையம ரானுய ராசனச்
செவ்வ ரைம்மிசைத் தீத்திரள் போல்பவ
னிவ்வு ரையிவ ணென்னெனச் சொல்லினான்
றெவ்வ ரைத்திறல் வாட்டிய திண்மையான். 240

வீரஞ் செய்து விழியல் வினையநூல்
பேர த•தேல் பெரிது மழகிதே
யோரு ம•தோ ருறுவினை யென்பதைத்
தேரச் சொல்லுநின் றிண்பொரு ளென்றனள். 241

வினைய தாகிய பெற்றி விரித்துநீ
தினையி னேரும் தெருட்டெனக் கென்னவே
அனைய வவ்விர தத்தோ டறிசல
மினைய கேளென் றெடுத்தன சொல்லுமே. 242

தன்னை யீந்ததும் தாரங்க ளீந்தது
மன்ன தன்பொருள் கேட்டறங் கொண்டவன்
மன்னு மில்லயன் மாந்தரைக் காணுமேற்
பின்னைச் செய்வன பேசலு மாகுமோ. 243

காம மூரிற் கணிகைய ரோடன்ன
தூய்மை யுண்மையிற் றோற்றங் கரந்தவட்
சேம மாவகைச் செல்கமற் றென்பதும்
வாம நூலின் மறைபொரு ளல்லவோ. 244

சிங்க தத்த ரெனப்படுந் தேரனார்
சங்க போதியி லாள்கட் டயாச்செய
விங்கி தென்னென வேழாய் தவசிகட்
கெங்கெங் காமி லெனவுரைத் தானரோ. 245

யாது மில்லை யுயிரென் றறநெறி
யோதி னானவ் வுயிரிலி தன்னொடு
வேத னைதணிப் பான்வினை வீட்டிற்கும்

சாத னைநிற்குஞ் சத்துவ னாமென்றீர். 246

சித்த மோடிக் கலங்கித் திரியாத
நத்தம் பெற்றது நற்றவ மேற்கொண்டான்
பத்தின் மேலும் பழிசெய்யு மேற்பள்ளி
வத்தன கண்டீ; வழக்கின்கட் கூரியீர். 247

போதி யாருரு வெய்திய புற்கலர்
வேதி யாற்கிடந் தாருள ராயினான்
ஞாதி யாரென நாட்டிய கூட்டமும்
ஓதி வைத்ததொன் றுண்மை யுணர்த்துமால் 248

ஆரம் பிச்சி யலிவிலங் கவ்வுருச்
சீரிற் கொத்தாள் கணிகை தெருண்டாள்பெண்
ஒரு மில்லா ளுயிரிலி யூமையுந்
தார மாக்கொ•டி ரென்றல் சலமதோ. 249

பிறந்த வில்லினுள் வாழ்க்கை பிழைப்பெனு
மறங்கொண் டான்கொண் டவாச்சிய வேடத்தாற்
சிறந்த வல்லன சிங்கின வெங்கணுந்
துறந்த வான்பொருள் சொல்லவும் வல்லையோ. 250

உரைப்ப பேரரு ளுண்பன மீனொடூன்
றிரைப்ப மெல்லனை செய்வ விழுத்தவம்
கரைப்ப தீவினை கண்டது சூனியம்
புரைப்பின் மார்க்கம் பொருத்த முடைத்தரோ. 251

எல்லா மசுசியு மென்ப வனவா
லல்லா லழுக்குற் றவனடிக் கேத்தலர்
சொல்லார் சுகமுஞ் சுகத னவனென்று
பல்லார் வருத்தம் பழுதெனப் பண்ணுப. 252

நிலையா வெனெச்சொல்லி நேர்ப்ப பொருடுயே
மலையோ ரனையந்ன் மாட மெடுப்ப
விலையே யுயிரென் றிறந்த நினைப
புலைசே யமர்ந்தவர் புத்தியின் வண்ணமே 253

மயித்திரம் பாவித்து மற்றவற் றூனை

யசிப்பன வேபோ லமர்ந்ததிருந்த துண்ணுஞ்
சயித்தியங் காணித் தலையினை முட்டும்
பயித்தியங் கொண்டவர் பண்புமா• தொக்கும் 254

புத்த ருருவுக்கும் போலிக்கும் போலியை
மத்தகத் தேத்தி வணங்கி வழிபடுஞ்
செத்த பொழுதினச் செந்தடி மென்றிடு
மத்த னுடைய வருள்வகை வண்ணம். 255

பேனறாக் கூறை பெருமுடுகுநாறுமேற் றுக்கந் துக்கம்
மானறா நோக்கி மணற்சுமையுந்தான்பெரிதாற் றுக்கந் துக்கந்
கூனிறாக் கண்டாலுங் கொள்ளமுடியாதேற் றுக்கந் துக்கந்
தானறாப் பறொழிலுந் தான்றுக்கமாதலாற் சருவ்வந் துக்கம். 256

பொய்பொத்திச் சொல்லினவும்போங்கூலி கொண்டனவும்
வையத்தஞ் சுட்டனவும்வாழ்மருது கொன்றனவும்
கையத்தி னூனுக்கேகன்றிக் கலாய்த்தனவு
மையத்தை யின்றியடுப வாலோவழல்நரகத் துள்ளேயடுப வாலோ. 257

பற்றே மிகப்பெருக்கிப் ப•றொடர்ப்பா டேயாக்கி
யற்றீர் போற் காட்டி யடைக்கலமே வவ்வுநீர்
பெற்றீரே பேயுடம் பன்றேற் பெரும்பாலு
மெற்றே யிருணரகிற் கீர்க்கு மாலோ
விரக்கமொன் றில்லீரை யீர்க்கு மாலோ. 258

ஆங்கவ ளறங்கூறக்கேட்ட வவாச்சியன்றான்
றேங்கம ழொலிகோதாய்சித்தமே யல்லதில்லை
தீங்கொழுக் கென்றதெல்லாந்தீவினையென் னல்வேண்டார்
பூங்கமழ் காராடைபோர்த்தவெம் புத்தரென்றான் 259

துத்தலே வேண்டிநின்றுதோந்தொடர்ப் பாடுநீக்காய்
சித்தமே நல்லதென்றாற்றேற்றலு மாவதுண்டோ
கத்திகொண்டில் லில்வாழ்பேய்காறலை வேறுசெய்து
குத்தவதின் னும்போழ்திற்கூடுமோகன் மையேடா. 260

உள்ளமும் பாயிரம்மு மொக்குமேல் வீடுமுண்டாம்
கொள்ளுமேற் குற்றம•தாக் கூடுமே பற்றுமாங்கண்
விள்ளுமேல் வேறதாய வேடமு மன்னதேயாங்

கள்ளமே சொல்லிநின்று கன்றினாற் காட்டலாமோ. 261

புனைந்துநீ சொல்லும் வீடும்போகவுண் டாக தந்தே
நினைந்துநாங் காணி னெல்லாநின்றதொன் றில்லை யென்றாற்
றுனைந்துதா னுண்மை நன்றுசூனிய மாதற் கென்றாட்
கினைந்தினைந் தேங்கி நல்லாயென்செயற் பால தென்றான். 262

செத்தவ ரப்பொழுதே தேவருட் செல்பவேனு
மத்தலை யின்பநோக்கா ரஞ்சுவ மாக்களந்தோ
தொத்துள வாகவென்னான் சூனிய வீடுசொன்ன
புத்தனை நோதுமத்த புலம்பனீ போகவென்றாள். 263

புன்னெறி யவைகளெல்லாம்போக்கிய பாக்கியத்தாய்
நன்னெறி நன்ஞானங்காட்சியு நன்குகொண்டென்
சொன்னெறி திரிவாயேற்சோர்வில்பே ரின்பமெய்தி
மன்னுதி யென்றுமற்றுங்கூறினாண் மாதராளே. 264

காட்டுழல் களிநல் யானைகால்கையி னோர்ப்பித் தேறித்
தோட்டியிட் டூர்வ தேபோற்சூரிய சோமன் றானும்
வாட்டடங் கண்ணி நல்லாள்வாக்கெனுந் தூக்க யிற்றாற்
பூட்டுபு கொள்ளப் பட்டான்போதியார்க் காதி யன்னான். 265

அருக்கமா சந்திரனையறங்கொளீஇ யாங்கவனை
யிருக்கும்வா யொருப்படுத்திங்கீதுநுனக் குரைத்தாரைப்
பொருக்கநீ சொல்லென்னப்புத்தனார் முதன்மாணி
முருக்குவாய்சென் றவனாம்மொக்கல னெனச்சொன்னான். 266

---------

## 5. மொக்கல வாதம் (267 – 462)

நீவருத லொழியென்றுநிறைபதும புரத்துக்கே
மாதிரந்தா னெறியாகமனம்போலச் சென்றெய்தி
மூதுரையுங் காரணமுமுழுதெழுதி யழகிதாய்ப்
போதுகளும் பொன்மணலும்புனைந்தினிய பொலிவிற்றாய். 267

கொடிமகரக் கோபுரமும்நெடுமதிலுங் குடிஞைகளும்
தொடிமகரத் தூணிரையுஞ்சொலற்கரிதாய்ச் சுவர்க்கத்தின்
படிமகரப் படிமையதப்பள்ளிகண் டளியள்போய்க்

கடிமகரக் கடல்கடந்துகலந்தந்த நலமென்றாள். 268

ஒழுக்கமுங் கல்விகளுமுரைத்தனவே யொப்பனகள்
இழுக்கில்லாப் பெருந்தவத்திலிங்கிகளைத் தான்கண்டு
முழுத்தாள தாய்ப்பள்ளிமுற்றத்தோ ரரைமரத்தின்
குழுக்கொம்பர் பிடித்தொருகாற்குஞ்சித்து நின்றுதான். 269

துன்னஞ்செய் தாடையைத்துவர்தோய்த்துக் கொட்டியும்
பொன்னஞ்செய் புத்தங்கப்புகையூட்டிக் கைசெய்து
தன்னமு மளித்தாயதலைசொறியு மிடையிலையா
லென்னவற்றி னாம்பயனையெனக்கறிய வுரையென்றாள். 270

ஆங்கவ ளதுவுரைப்பவதற்குரிய மறுமாற்றந்
தாங்களு மரைக்கில்லார் தலைசாய்த்தங் கிருந்தார்
மூங்கைமையான் மொழிகொண்டேன்மொக்கலநற் றேரயான்
பாங்கினால் வினவுவன்படிறின்றி யுரையென்றாள். 271

வீடிற்கே யெனின் ஞானம்வேண்டாதே முடியுமாற்
பீடிற்கே யெனினின்னிற்பெருஞ்செல்வர் திருந்தினார்
மூடிற்றின் பயனென்னையெனவினவ மொக்கலன
மூடிற்றுஞ் சிறிதுளதாலுருவறிதற் கெனமொழிந்தான். 272

படைப்பெளிதாற் கேடறிதாற்பலகள்வர் நவையாரா
லுடைக்கியைந்த வொலியற்றாலூன்றருவார்க் குணர்த்துமால்
விடக்கமர்ந்த வுள்ளத்தாய்வேடமு மறிவிக்குந்
தொடர்ப்பாடும் பெரிதன்றாற்றொட்டைந் பூணியோ. 273

பொன்கொண்டா ராயினும் போர்வைபூச் செனிற்புலையன்
வன்கண்மை யாற்செய்தவஞ்சமே யெனவளைப்பர்
தன்றன்மை யாகியதான்பழிப்பார் தாமுளரோ
வெண்கண்டு வந்திங்கணிதுகொண்டா யெனச்சொன்னாள். 274

உண்ணன்மை தவமென்றங்குறுப்பெல்லா மறைக்கின்றாய்
திண்ணென்ற மனமிலைநீசிறைபலவுஞ் செய்தலால்
பெண்ணென்றும் பிறவென்றுந்தானோக்கிப் பெரும்பேதாய்
கண்ணன்றோ வுள்ளத்தைக்கலக்குவன வவைகாவாய். 275

பெண்பாலார் கண்டக்காற் பேதுறுவ ரெனவுரைப்பாய்

திண்பான்மை யவர்க்கழியச்சிதையுநின் றவமாயின்
மண்பாலா ரவருள்ளமாண்புளதா யுரையாரா
லெண்பாலும் படாதாகியிழுக்குநின் குணமந்தோ. 276

இழுக்கினு மிழத்தியாலிடறினு மதுவேயால்
விழுக்கலமால் வினைபெரிதால்வினைக்கேடாந் தொழிறருமா
லொழுக்கிற்கு முரித்தன்றூணோரிடையூ றுடன்கொடுக்கும்
வழுக்கின்றித் தவஞ்செய்யின்மண்டையாற் பயனென்னோ. 277

நிறந்தூய்தா நீரினால்வாய்தூய்தாம் பாகாற்
பறைந்துபோய் மெல்கோலாற்பல்லெலாந் தூயவாம்
புறந்தூய்மை செய்தக்கால்புரிவள்ளந் தூய்தாமே
லறந்தூய்மை கணிகையர்க்கேயாற்றவு முளதாமால். 278

சவருடைய மனைவாழ்க்கையெனப்போந்து தவம்புரிந்தாய்
பவருடைய விறகிறுத்துப்பலகலங்க ளொருப்படுத்துற்
றுவரோடு பல்கூறையுடன்புழுக்கி யொலித்திடு நீ
துவரடுதி பூவடுதிசோறடலே முனிந்தாயோ. 279

வண்ணாரம் துன்னாரம் மச்சிகமே கச்சாரஞ்
சண்ணார மெனப்பிறவுந் தவத்துள் நீ கற்றனவா
லெண்ணார்ந்த காரங்க ளில்லகத்தே பயின்றாயே
லுண்ணாயே வயிறார வோர்ப்பொன்று மிலையேகாண். 280

சிறந்தாய்க்கீ துரைக்கலாஞ்சிந்தனையை முடிப்பதே
துறந்தார்க்குக் கடனாகிற்சோறலாற் பிறவேண்டா
லிறந்தார்க்கு மெதிரார்க்குமிவட்காலத் துள்ளார்வான்
பிறந்தார்க்கு மிதுவன்றிப்பிறிதொன்று சொல்லாயோ. 281

உண்டியா லுடம்புளதாலுடம்பினா லுணர்வாமென்
றெண்டிசையும் பரந்திசைப்பவீதுனக்கே தெரியாதோ
தண்டியாய்க் கழியாதுதவஞ்செய்த லுறுதியேற்
பண்டியாற் போக்குநின்ப•றொடர்ப்பா டெனச்சொன்னாள். 282

அருளுடையா ளுரைப்பக்கேட்டாங்காரித் தவனுந்தன்
பொருளுடைமைத் தருக்கினும்புன்ஞானக் களிப்பினு
மருளுடையார் மதிப்பினுமாற்றந்தான் செயற்பொருட்டா
லிருளுடைந்த கூந்தலாளிட்டத்தை யெண்ணுவான். 283

தரணென்று நன்றென்றாடன்றன்மை யுருவென்றாள்
அரணென்னத் தெளிந்ததுதானாருகத மேமன்னு
முரணின்ற துண்மையான்மொக்கலனு முனிந்துரைப்பா
னிரணியனைப் போல்வந்திங்கிடர்ப்பட்டா யென்றானே. 284

என்னாலும் வெலப்பட்டாரிருவருள ரிங்கவரைச்
சொன்னாலு மறிதிநீதுடிகடியு மிடையுடைய
கொன்னாணு நெடுவேற்கட்குண்டலமா கேசியு
மன்னாளுக் கறமுரைத்தவருக்கமா சந்திரனும். 285

என்றாளை முகநோக்கியிதுபெரிதும் பொய்த்தனைநீ
யொன்றாத கொள்கையாருலகினுள் யாவரையும்
வென்றாள்மள் றிவள்சம்புவிரதியாய்த் திரிந்தெங்கும்
நன்றாரம் பிறர்க்கீந்தான்றருமங் கொண்டென்றானாய். 286

வேதியரை முதலாகவெலப்பட்டா ரிவரிவரென்
றோதியாங் கவையவைதா மிவையிவையென் றுரைப்பக்கேட்
டாதிகா லாவணத்துளார்கதரை வென்றதனை
நீதியா லுரைத்தியேனின்னையான் வெல்லேனோ. 287

எனக்கேட்டாங் கெடுத்துரைப்பானிந்திரர்க டொழப்படுவான்
றனக்காய தர்மமுமதர்மமுங் காலமுங்
கனப்பாட்டிற் காயமேயுயிருருவே புண்ணியமே
நினைக்குங்காற் பாவமேகட்டுவீ டெனநிறுத்தி. 288

இப்பொருட்க ணிகழ்ச்சியு மிவையிவையா மெனவிரித்துச்
செப்பினா னாதன்றன் சிந்தைக் கெழுந்தவா
றப்பொருளு மந்நிகழ்வு மவையவையா வறியாதை
வப்பிள வனமுலையார் மணல்விளையாட் டதுவேபோல். 289

மொக்கலனு மிதுகூற முல்லைநா றிருங்குழலா
ணக்கனளா யிதுகூறு நாதன தியல்பறியா
யிக்கிரமத் திந்திர னிருடிகளைத் தேவியரைத்
தக்கதாத் தொழுதக்கா லவர்தலைவ ரெனலாமோ. 290

எந்தலைவ ரியல்பொடுநூ லின்னணமென் றறியாதாய்
சிந்தனைக்க ணாயினுந் தீமையு முரைத்திலையாற்

றந்துரைத்த தலைவனூற்  றத்துவமா மாகவே
முந்துரைத்த பொருணிகழ்வு பிழைப்பின்மை முடியாவோ. 291

அத்தியைந் தெனினல்லவறுபொருளு மவையாகா
வுத்தியா வெடுத்தோதுமொன்பதனோ டொட்டலவாற்
குத்¢ய பல்குறையே யன்றியுமிப் பொருளெல்லாம்
பொத்தியுங் காட்டுவாய்பொருளியைவோ பெரிதென்றாள். 292

சலம்படவே யுரைத்தனைநீதருமத்திற் செல்லுதுமென்
றிலம்படுமே லியக்கில்லையென்பதெம் முரையென்போம்
கலஞ்செல்லுங் கடலதனைக்காற்றேபோ லுந்தாதாம்
பலம்படு முரைநினக்குப்மாம்புண்ட பாலேபோல். 293

அல்லதற்க மப்படியேயாமென்ற லதுகொள்ளாய்
செல்லவுஞ் செலுத்தவுநில்லவு நிறுத்தவுஞ்
சொல்லியவாய் தேய்க்குறுவாய்சொல்லிக்கொள் வலியதனால்
பல்லொடும் படத்தேய்த்தாற்பயம்பெரிதும் படுமன்றோ. 294

கடனிலமா காயமேயமையாவோ விவையிரண்டு
முடனில்லை யாயினுமூனமிங் கெவனென்பாய்
மடனுடையை நீபெரிதுமன்னுயிர்க்கும் புற்கலக்கு
மிடனெல்லா வுலகி னெல்லையும் புறப்படுமோ. 295

பலசொல்லிக் குறையென்னைப்பஞ்சமா கந்தமே
யலகில்லாப் பெரும்பரப்பினாகாய நினக்கில்லை
நிலைசெலவிற் கிவை வேண்டாநின்பொருளு மிவையல்லா
வுலகெல்லை யுரைப்பான்புக்குணர்வினையே வருத்துதியால். 296

காலநீ வேண்டாயாய்க்கணிகமுங் கற்பமும்
சாலமும் புனைந்துரைத்தி சமழ்ப்பென்னு மிலையாகிப்
பாலமா பண்டிதனே பழநோன்பி யிவனென்பாய்
மாலுமிங் குடையையோமயக்குவதொன் றுண்டனையோ. 297

இக்கோட்க ளெழனோக்கியிவையிவையோ யாமென்றா
லக்கோட்க ளெழனோக்கியவையவையாக் கண்டிருந்
தெக்கோளு மில்லென்பாயாண்டெண்ணி யேத்துதியான்
மெய்க்கோளா லென்றியான்மிகைதெருட்டுந் திறங்காணேன். 298

கருத்தினாற் பெற்றாமோ கண்கூடாக் கண்டோமோ
பொருத்தனையென் றுரைக்கின்றாயுறுநோயைத் தீர்ப்பதோர்
மருத்துநூ லில்லையான்மயங்கியே சொல்லாது
திருத்தியநின் னுணர்வின்மைதெருட்டிக்கா ணெனச் சொன்னாள். 299

பொறியுணர்வின் புலமாயபுற்கலமே யுயிரறியு
மறிவினா லறியாதேயாமாகா தெனவுரைப்பாய்
நெறியென்னை யிந்திரன்றன்நெடுநகரக் கவன்றேவி
குறியளோ நெடியளோநூலொழிப்பாய் கூறிக்காண். 300

மெய்யளவிற் றுயிரென்றுமெய்யகத் தடக்குரைத்தல்
பொய்யளவைக் குடங்குடத்திற்புகலருமை போலென்பாய்
மெய்யளவ்஁ன் மெய்யுணர்வைமெய்யகத் தடக்குரைத்தி
யையனையே யடங்கானென்றதுவாதன் வண்ணக்கால். 301

அருவாத லாலடங்குமுணர்வுதா னங்கென்னிற்
பெருவாத மங்கில்லைபெற்றியொன் றறியாத
திருவாள னுரைவண்ணந்தீட்டொட்டுக் கலப்பியாப்
புருவாய வுடம்பினோடுணர்வினுக் குளதாமோ. 302

யாப்புண்டா லுழப்பதவ்வுயிரென்றேற் கதுவன்று
போய்ப்பிண்டத் துழப்புழப்பப்புலம்புவ தென்செயலென்பா
யேப்புண்பட் டான்படநோயேதிலர்க்காய்ச் சோமாகிச்
சாப்புண்பட் டேனென்றுசாற்றுவதுன் றத்துவமோ. 303

உழப்புழப்பச் செய்கையானுறுதுயருற் றேனென்றல்
பிழைப்பதுவாக் கருதாதேபெருவழியு ளிடறுதியா
லுழப்பறிவு குறிசெய்கையொருவனவே யெனச்சொன்னார்க்
கிழிக்குவதிங் கில்லாமையிதனாலே யறியனென்றாள். 304

அருவாயில் யாப்பில்லையன்றாயிற் குறைபடூஉ
மிருவாறின் கூட்டமுந்தீதென்ப தெம்மிடமே
மருவாதா யுரைத்ததனைமனங்கொள்ளா யதுவன்றிப்
பொருவாறொன் றுரைத்தாலுமொருவாறு முணராயால். 305

அறிவெழுந் தவலிக்குமென்பதூஉ மதுவெழப்
பிறிதொன்று பேதுறுமங்கென்பதூஉம் பெரும்பேதாய்
குறிகொண்டா ருரையன்றாற்குற்றமே கொளலுறுவாய்

பொறிகொண்டு காற்றினையும்போகாமற் சிமிழாயோ. 306

பிறன்சுமவான் றானடவான்பெருவினையு முய்க்கில்லா
வறஞ்செய்தா னமருலகிற்செல்லும்வா யரிதென்று
புறம்புறம்பே சொல்லியெம்பொருணிகழ்ச்சி யறியாயாற்
கறங்குகளி மல்லனவுங்காற்றெறியத் திரியாவோ. 307

மகனேயாய்ப் பிறப்பினு மாதுயரங் கேடில்லை
யவனாகா னாயினு மறஞ் செய்த லவமாகு
மெவனாகு மென்றெம திட்டமே யுரைத்தியா
னகைநாணி நீநின்னை நன்பகலே மறைக்கின்றாய். 308

வீயுடம்பிட் டுயிர்சென்று வினையுடம்பு முளகாகத்
தாயுடம்பி னகத்துடம்பு தான்வைத்த தின்றியே
நீயுடம்பு பெற்றவா றுரையென்பாய் நிழல்போலும்
டேயுடம்பு பிறிதுடம்பிற் புகல்பேதாய் காணாயோ. 309

எப்பொருளு மொன்றொன்றிற்கிடங்கொடுத்த விரும்புண்ணீர்
புககிடங்கொண் டடங்குதலேபோலவும் தந்தைதாய்
சுக்கிலமுஞ் சோணிதமுந்தழீஇச்சுதையு ணெய்யனைத்தா
யொத்துடம்பி னகத்தடங்கியுடன்பெருக மெனவுரைத்தாள். 310

செய்வினைதா னிற்பவே பயனெய்து மென்பதூஉ
மவ்வினை யறக்கெட்டா லதுவிளையு மென்பதூஉ
மிவ்விரண்டும் வேண்டுத லெமக்கில்லை யெடுத்துரைப்பி
னைவினையி னிலைதோற்ற நாசந்தா னாட்டுங்கால். 311

பைம்பொன்செய் குடமழித்து;பன்மணிசேர் முடிசெய்தாற்
செம்பொன்னா னிலையுதலுஞ்சிதைவாக்க மவைபெறலு
நம்பான்றிங் கிவைபோலநரர்தேவ ருயிர்களையும்
வம்பென்று கருதனீவைகலும்யா முரையாமோ. 312

கொன்ற பாவமுண் டாயின் குறட்கண்ணும்
ஒன்று மேயென் றுரைப்பனெப் பாரியார்
பொன்றினும் புத்த ரேநீவி¡; சொல்லின
சென்று சேர்தலைச் சித்தம தின்மையால். 313

சொன்ன சூனைத் துறந்தவற் றட்டன

பின்னை யுண்டல் பிழைப்புடைத் தென்றியா
னன்னு தல்லைத் துறந்தவ ளட்டது
தன்னை யுண்டுந் தவசியை யல்லையோ 314

கொன்ற பாவங் கெடுகெனக் கையிட்டு
நின்ற தென்பது நீயுரைப் பாயெனி
னன்று துன்னின தாதன்மை யாற்சொன்னாய்
சென்றும் வந்துந் தியானம் புகலென்றாள். 315

இன்ப துன்ப மிருவினைக் காரிய
மென்ப வர்க்கென்னை யேதமுண் டென்றியேற்
பின்பு பேணுந் தவத்தினி னாகிய
துன்ப வர்க்குந் துதாங்கனத் தொன்றுமே. 316

செய்த தீவினை சென்றின்ப மாக்குமென்
றி•து ரைப்பவ ரீங்கில்லை யாயினும்
பொய்கள் சொல்லிப் புலைமக னேயெம்மை
வைதல் காரண மாநின்று வைதியோ. 317

இந்திரி யங்களை வென்றற் பொருட்டென
வந்து டம்பு வருத்தல் பழுதென்பாய்
தந்து ரைத்த தலைமழி யாதிய
சிந்த னைக்கிவை செய்வதெ னோசொல்லாய். 318

புனைவு வேண்டலர் போக நுகர்விலர்
நினைவிற் கேயிடை கோளென நேர்தலா
லினைய வும்மல மேறினு மென்செய
மனைய தான்மக்கள் யாக்கையின் வண்ணமே. 319

பாவந் துய்த்துமென் றோமல்ல துய்ப்பினு
மாவ தின்மைக் கரசுரைத் தாயன்றோ
வோவ லின்பந் தருமெ னுயிரென்பாய்
தேவ னாகித் திரிந்துதான் காட்டிக்காண். 320

அழிவு காலத் தறத்தொடர்ப் பாடெலா
மொழியல் வேண்டுமென் றொற்றுமை தாங்கொளீஇ
வழியுங் காட்டுமம் மாண்புடை யார்கண்மேற்
பழியிங் கிட்டுரைத் தாற்பய னென்னையோ. 321

சிந்த னையினுந் தீவினை யாமென்பார்க்
கைந்திற் காம மமையுமென் றீரென்பாய்
சுந்த மாகச் சுவடறு வீரென
வந்தி தோறும் புடைக்க வமையுமோ. 322

பெண்ம கள்ளிர் பிறகிட வுண்பவர்
கண்ணி னாலில்லுட் கந்தியைக் காணினு
முண்ண லம்மெனும் மோத்துடை யார்களைத்
திண்ண தாவைது தீவினை கோடியோ. 323

பிள்ளை பெண்ணலி யாயினும் மாண்வயிற்
றுள்ள தேயென் றொழுக்கங் கொடுத்தியாற்
பிள்ளை பெண்ணலி யன்மையை யாதினா
லுள்ளங் கொண்டிழ வூசி யுரைப்பதே. 324

மோனம் பொய்யஞ்சிக் கொண்டவன் மெய்யுரைக்
கூனந் தோன்றி லுரைத்தன னென்றியேற்
றானம் யாவர்க்குஞ் செய்வது நன்றனென்பா
யீன மென்னோ தெருச்சுமக் கிற்றியோ. 325

உய்யக் கொள்வ னெனச் சொல்லி யுள்ளத்தாற்
கையிற் காட்டல் கரவுள தாமெனிற்
பொய்சி தைத்ததென் சொல்லிப் பெயர்ந்துரை
பொய்யு ரைத்தில bனன்றல் பொருந்துமோ. 326

கொல்வினை யஞ்சிப் புலால் குற்ற மென்பதை
நல்வினை யேயென நாட்டலு மாமென்னை
வில்லினை யேற்றிநும் மெய்ம்மை கொளீஇயது
சொல்லினை யாதலிற் சொல்வன் யானே. 327

புத்தர்கட் பத்தியிற் போதி மரந்தொழிற்
புத்தர்கட் பத்தரை யேதொழு புத்தர்கட்
பத்தியை யாக்கு மதுவெனிற் (பற்றிய)
பத்தங் குடைசெருப் புந்தொழு பாவீ. 328

ஆங்கவர் போல வருள்செய் பவர்களை
நீங்குமி னென்பது நீர்மை யெனினது

வீங்கிதற் கெய்தா விடினிலை போதிக்கும்
தீங்கே நுமர்செய்கை தேரமற் றென்றாள். 329

பல்லுடை யான்றன்னைப் பண்டுகண் டேத்தினுந்
தொல்லுரை கேட்டுறுப் பேதொழு தாலும்பி
னல்வினை யாமென்று நாட்டுதி யாய்விடிற்
கொல்வதுந் தின்பதுங் குற்றமற் றென்னாய். 330

ஏத்தின ரேத்துக வென்றிறை போல்வன
பாத்தில பைம்பொற் படிமைசெய் தாலவை
யேத்துநர் பெய்தவ ரெய்துவ நன்றெனில்
வீத்தவர் தின்பவர் வெவ்வினைப் பட்டார். 331

வெற்றுடம் புண்பதும் வேலின் விளிந்தவை
தெற்றென வுண்பதுந் தீமை தருமென்னை
யொற்றைநின் றாடுணை யூறு படுத்தவட்
குற்றமன் றோசென்று கூடுவ தேடா. 332

பிடிப்பது பீலி பிறவுயி ரோம்பி
முடிப்ப தருளது போன்முடை தின்று
கடிப்ப தெலும்பதன் காரண மேனி
தடிப்பத லாலரு டானுனக் குண்டோ. 333

ஆட்டொரு கான்மயிற் பீலி யுகமவை
ஈட்டுதல் போலுதிர்ந் துக்க விறைச்சியைக்
காட்டியுந் தின்னுங் கருத்திலை நீ தசை
வேட்டுநின் றேயழைத் தீவினை யாளோ. 334

மானொடு மீனில மன்னு முடம்பட
லூனடு வாரிடு வாரை யொளித்தலிற்
றானடை யாவினை யாமென்ற றத்துவந்
தீனிடை நீபட்ட தீச்செய்கை யென்னோ. 335

குறிக்கப் படாமையிற் கொல்வினை கூடான்
பறித்துத் தின்பானெனிற் பாவமாம் பூப்போற்
செறிக்கப் படுமுயிர் தீவினை பின்னு
நெறிக்கட் சென்றாறலைப் பாரொப்ப னோர்நீ. 336

விலையறம் போலு மெனின்வினை யாக்க
நிலையுமீ றென்பது நேர்குவை யாயின்
வலையினின் வாழ்நர்க்கும் வைகலு மீந்தாற்
கொலையென்றும் வேண்டலன் றோகுண மில்லாய். 337

நும்பள்ளிக் கீபொரு ளாலுணர் வில்லவ
ரெம்பள்ளி தாஞ்சென் றெடுப்ப வெனினது
கம்பலை யாம்வினை யில்கறிக் கீபொருள்
செம்பக லேகொலை யாளரிற் சேரும். 338

நாவின்கண் வைத்த தசைபய னேயென
வேவினை நீயுமற் றின்பம• தாதலிற்
றேவன்கண் வைத்த சிரத்தை செயலன்று
தூவென வெவ்வினை யைத்துடைத் தாயால். 339

கன்றிய காமந்துய்ப் பான்முறைக் கன்னியை
யென்றுகொ லெய்துவ தோவெனுஞ் சிந்தையன்
முன்றினப் பட்ட முயன்முத லாயின
நின்றன வுந்தின நேர்ந்தனை நீயே. 340

தூய்மையி லாமுடை சுக்கில சோணித
மாமது போன்மெனி னான்முலைப் பாலன்ன
தூய்மைய தன்றது சொல்லுவன் சோர்வில
வாம னுரைவையந் தன்னொடு மாறே. 341

மேன்மக்க ணஞ்சொடு கள்வரைந் தாரது
போன்மக்க ளாரும் புலால்வரை யாரெனிற்
றான்மெய்க்க ணின்ற தவசிமற் றெங்குள
னூன்மெய்க்கொண் டுண்பவ னுன்னல தென்றாள். 342

பார்ப்பனி யோத்துநின் னோத்தும் பயமெனி
னீப்பவுங் கொள்பவு நேர்து மவையவை
தூப்பெனு மில்லன வேசொல்லி நிற்குமோர்
கூர்ப்பினை நீயென்றுங் கோளிலை யென்றாள். 343

தூவினி னுண்புழுத் துய்ப்பனென் னாமையிற்
றீவினை சேர்ந்திலன் றின்பவ னென்னினு
மோவெனு முன்விலை வாணிக ரென்றினர்

மேவினர் தாம்விலை யேவினை வேண்டார். 344

அடங்கிய வம்பு பறித்தன் முதலா
வுடங்குசெய் தார்வினை யொட்டல ரென்பாய்
மடங்கினர் வாழ்க வெனுமாற் றார்போற்
கடஞ்சொல்லித் தின்பதிங் கியார்கட் டயாவோ. 345

தின்னு மனமுடைப் பேயெய்துந் தீவினை
மன்னு மிகவுடைத் தாய்வினைப் பட்டில்லா
ளென்னு முரைபெரி தேற்கு மிகழ்ச்சி
தன்னை வினைப்பட நீசொல்லி னாயால். 346

அறஞ் சொல்லக் கொள்ளு மறமென் றறிந்தாங்
கறஞ்சொல்லி னார்க்கற மாமென் றறியாய்
புறஞ்சொல்லி தன்று புலால்குற்ற மென்று
துறந்தொழிந் தாற்கொலை துன்னினர் யாரோ. 347

அறந்தலை நின்றாங் கருளொடு கூடித்
துரந்தனள் யானென்னுஞ் சொல்லு முடையாய்
மறங்கொண்டி துண்டென்னை மன்னுயிர்க் காமே
சிறந்ததுண் டோவிது சிந்தித்துக் காணாய். 348

பேயொப்ப நின்று பிணங்கிக்கண் டார்க்கெனு
மாயத்தி னூனுண்ண மன்னு மருமையி
னாயொப்பச் சீறி நறுநுத லாளொடு
காயக் கிலேசத்திற் கட்டுரைக் கின்றான். 349

வெயிறெறவ் வுணங்கியும் வெள்ளிடைந் நனைந்துமூன்
டயிறலிற் பட்டினிகள் விட்டுமின்ன கட்டமாய்த்
துயிறுறந் திராப்பகற் றுன்பவெங் கடலினார்க்
கயிறெறுந் நெடுங்கணா யாவதில்லை யல்லதும். 350

காயம்வாட்டி யுய்த்தலிற் கண்டநன்மை யுண்டெனின்
தீயினாற் சுடுதலுந் தெற்றியேறி வீழ்தலு
நோயினாற் றிரங்கலுந் நோன்மையென்ன லாம்பிற
நீயனா யிதற்கினி நேமியென்று சொல்லென. 351

புண்ணினைத் தடிதலும் போழவாற்றி நிற்றலும்

கண்ணினைக் கழிகள்ளான் மிண்டிக்கொண்டு நீட்டலும்
விண்ணுயர் நெடுவரைவ் வீற்றுவீற்று வீழ்தலும்
அண்ணலார்தஞ் செய்கையு மாவதில்லை யல்லதும். 352

தூக்கடம்மை யாக்கலே தொல்லைநல் லறம்மெனின்
நாக்களைப் பறித்தலுந் நான்றுவீழ்ந்து பொன்றலுந்
தீக்கள் பாய்ந்துசாதலுந் தீயசெங் கழுவ்வின்மேன்
மேக்கினைக்கொண் டேறலு மேன்மையென்ன லாம்பிற. 353

தானஞ்சீல மும்பொறை தக்கதாய வீரியம்
மூனமில் தியானமே யுணர்ச்சியோ டுபாயமும்
மானமில் லருளினைவ் வைத்தலேவ லிம்மையுஞ்
ஞானமீரைம் பாரமீதை நாடுங்கா லிவைகளும். 354

விருக்கமூலி யாகலும் வெள்ளிடை யுறைதலும்
மிருத்தனிற்ற லன்றியு மிட்டகூறை யெய்தலும்
மருக்கையின் மயானத்துட் சேக்கையும் மனைகளை
வருச்சியார் புகுதலும் மற்றவற்றொ டுண்டலும். 355

அத்திட்டாடை கோடலும்மமையுமென்ன நீங்கலும்
பெற்றதன்னிற் சேக்கையும்பேர்த்துண்ணா தொழிதலும்
குற்றமென்னப் பிச்சையுங்குறித்துழிப் புகாதுதான்
றுற்றியுய்த்த றன்னொடுதுதாங்கென்றாத்தர் சொன்னவே. 356

பாரமீ துதாங்கொடு பற்பல கிலேசமும்
நேருமனையி லுண்மையா னீரும்வேண்டி னீரெனக்
கூரிமம் வெயில்பசி கூடலுங் கூடினாற்
சேர்தலில்லை நல்லறஞ் சிந்தையென்று செப்பலும். 357

அருந்தடிக ளீரவும் மறஞ்செய்வாளிற் போழவும்
வருந்தவான துள்ளநீ மாட்சிநன்று மென்றியா
லிருந்துநின்று நன்னெறிக் கிடைப்படாத சிந்தையாற்
பெருந்தவங்கள் செய்ந்நரைப் பேசுவாயோர் பேதையே. 358

புத்தராகு மாண்பினா போதிகத்து வர்கட்காம்
பத்துமாய பாரமீதை பாரவட்ட மென்றலும்
சித்தராகு மாண்பினாற் சீலமும் வதங்களும்
மெத்துணையும் மாயிரம்மா மென்றுமியாமு மென்றனள். 359

உடம்பினுள்ள பல்லுயிர் சாவவூனுண் மானுக்குத்
தடங்கொண்மா வரைமிசைத் தன்னையீத னன்மையேற்
படம்புனைந்த வர்கடாம் பலருமுண்ணு நீரினுள்
விடம்பெய்தாற்கு நன்றுகொல் வியாதியாளன் றீர்கென. 360

அல்லவர்கள் சாதலை அறிந்தனன் னவனெனில்
நல்லதில்லை நஞ்சினா லென்றுநாட்டு வாயெனி
னெல்லையில்ல பல்லுயிர் தன்கணுள்ள வெஞ்சலுங்
கொல்லவந்த வூன்களும் குற்றமென்ற வாறுகொல். 361

நீட்சி திரிவா மயிருகி¡; காட்டினை
மாட்சியில் லாமயிர் மன்னுயி ருள்வழித்
தாட்க ணிமிருந் தலைநிமி ராவெழல்
காட்சி மரத்திற்குக் காறலை யெங்கம். 362

மரங்கள் வளருமென மன்னுங் கூம்பி
விரிந்த விலையின் வேற்றுமை சொன்னாய்
பொருந்து மிவையு மல்லவு மன்றோ
வொருங்கிவ் வுலகத் துயிர்களு மென்றாள். 363

வயாத்திரு வாக்கி வளர்பூ சணிக்குத்
தயார்செய்கை தீதென்னுந் தத்துவங் கண்டா
யுயாப்பிழைத் தாய்மெழு கூனொடு பட்ட
வயாவதற் கீண்டுப் பயத்தலி லன்றே. 364

யாதினு மாழ்குமம் மாழ்கியு மென்றுழி
நீதின்னுந் தோலை நெருப்பொடு கூட்டத்தி
னோதினை தேறுற நீர்க்குரைத் தாய்மற்றுஞ்
சேதனை யில்லாய் திரிவென்னை வண்ணம். 365

அரும்பு மலரு மரும்பிணி தீர்வு
மொருங்குதங் காரணத் தாக்க முணர்த்து
மரங்களு மன்னுயி ரெய்தின வென்ன
விரும்பொடு காந்த மியைவி றிரிவே. 366

ஒப்ப மரங்கட் குயிருண்மை யாமினி
யிப்படித் தோன்று மிருதுக்கள் சார்ந்தெனச்

செப்பிய வேதுத் திரிவெனக் காட்டிய
வெப்பங் குளிரவை தாமவை யேயால். 367

மரங்களை யொப்புமை யாலுயி ரென்னக்
கிரந்தியும் வெப்பங் கிளக்குவை யாயி
னிரந்த வுடம்பின் விகார நினக்குப்
பரந்துண ருண்மையைப் பார்ப்படுத் தாயால். 368

வாட்டங்க ளுண்மையின் வாழ்மரஞ் சேர்ந்தவை
நாட்டிய வாதலி னல்லுயி ரோவெனக்
காட்டிய தோலொத் திராமையும் வாடுமத்
தோட்டஞ்செய் சேம்புயிர் தொன்முடி வன்றோ. 369

அற்ற வுடம்புக ளாறுத லான்மரந்
தெற்ற வுயிருண்மை செப்பத்தி னாமெனப்
பெற்ற பிழைசொல்லிப் பித்தெழுந் தாரொப்பக்
குற்ற மிவையெனக் கூறிதி யன்றோ. 370

காட்டின மண்ணை முதலா வுடையன
வோட்டி யுரைத்த வுயிரென வொட்டலர்
நாட்டினுள் வாழ்பவ ரின்னரென் றாவந்த
நாட்டை யவரென்ன நாட்டிய வாறே. 371

தாவர மாய மரமிவை தாமென
யாவருஞ் சொல்லுப வ•து மறிந்திலை
நீவி ரெவர்சொல்லச் சொல்லினீ ரென்றுநின்
சீவரம்போற் கட்டில் செப்புவ தென்னோ. 372

மக்களுட் டோன்றிய போழ்த மரவுயிர்க்
கொப்ப வுடம்பறி வன்றியொன் றில்லெனிற்
றக்கதன் றன்மையுடைப் போதி சத்துவன்
மிக்கதென் னோதிக்கு வேற்றுமை வேண்டார். 373

நாண முடைய மரமுத லியாவையும்
மூணின வாழ்ந்துமுண் ணாவிடிற் சாதலைக்
காணவும் பட்டது கஞ்சியோ டல்லதை
யாண மிலாப்பொரு ளாட்சியர் போன்றே. 374

மயக்குடை மாட்சியி னார்க்கு மரங்கட்கு மன்னுயிர்தாம்
பயப்பட வொக்கு மெனவே யெனமன்னும் பற்றிலனாய்
வியப்புடை யாகம மீதென நீயும் விரித்துரைக்கு
நயப்பிர மாணங்கண் மேற்குற்ற நாடுவன் யானெனவே. 375

நிற்றலுங் கேட்டினோ டுண்மையு மின்மையு நேர்தலினு
மொற்றுமை வேற்றுமை தம்மையு மொட்டப் படுதலினுங்
குற்ற மிவையிவை யாதலைக் கேளெனக் கூறினனே
முற்ற மவளது பக்க மறிதலில் மொக்கலனே. 376

வேயொத்த தோளி நிலையுதல் வேண்டப் படுதலினாற்
காயத்தின் றன்மைய வாயெக் கருமமுங் காண்பரிதா
நாசத் தவமெனிற் றோன்றுவ தாமு நவநவமாம்
தோசத்த வாநின் பொருளெனக் கேட்டிது சொல்லினனே. 377

நின்றன வேயென்று நில்லலவேயென்று நேர்பவர்க்கு
மொன்றென வேயும்பின் வேறெனவேயுந்தம் முண்மையின்கட்
சென்றன வேயென்றுஞ் செல்லலவேயென்றுஞ் செப்பினர்க்கே
அன்றென லாமோ வறைந்தபல்குற்ற மவையவையே. 378

நின்ற குணங்களி னித்தியமென்று நிலையிலவா
மென்ற குணங்க ளநியத மென்று மியம்புதலாற்
சென்ற குணங்க ளிருமையு மல்ல தவற்றினிற்றீர்ந்
தொன்றங்கு நின்ற பொருளுள்ள தேலா தெனவுரைத்தான். 379

கேடில வாய குணத்தி னிலையுங் கெடுங்குணத்தி
னீடில வென்பது நேர்ந்தினி யப்பொரு ணோர்தலில்லாய்
மூடலை யாவதன் காரண மென்னை முடிகுணத்திற்
கூடல தாய குணிப்பொருள் கூறினர் யாவரென்றாள். 380

குணங்களல் லாற்பொருள் வேறில்லை யாயிற் குறிப்பொருளாம்
பிணங்கல வாகிப் பிறபிற வாயிற பிறபொருளா
முணர்ந்தன தாமிகு சொல்லினு மொன்றெனி னொன்றவையா
நுணங்கிய கேள்வியி னாயொன் றுரையென நோக்கினனால். 381

நிலையா தெனவு முயிரில்லையென்று நெறிமையினாற்
றொலையாத் துயரொடு தூய்தன்மையென்றின்ன தொக்குளவாக்
கலையா விழுப்பொருட் கந்தங்களைந்திற்கும் காட்டுதலான்

மலையா திதுநுங்கண் மார்க்கத்தொடென்றனள் மாணிழையே. 382

ஆரிய சத்தைய லாற்கந்தம்வேறில்லை யேற்குறியா
மாரிய சத்தையுங் கந்தமும்வேறெனின் வேறவையாம்
போ¢வை தாமிரண் டொன்றினுக்கேயெனி னொன்றவையாங்
கூரிய சிந்தையி னாயொன்றுசொல்லென்று கூறினளே. 383

சொல்லலன் யானெனச் சொல்லுவையாயினுஞ் சொன்மலைவாம்
சொல்லல னென்ன வினவினுமென்னினுஞ் சொல்லிலையாம்
சொல்லுவ னல்லன் ஒருவகையாச் சொலினவ் வகையாற்
சொல்லிய குற்றங்க டுன்னுமெனவது சொல்லினனே. 384

தன்மையி னன்மையுந் தன்னல்பொருள்களி னுண்மையுந்தம்
பன்மை யுடையவப் பண்புகளெல்லா முடனுரையுஞ்
சொன்மை யுணரா தவர்கட்குத்தான்சொலற் பாடின்மையாற்
புன்மை யுடைய புறத்தீருரைக்கு முரையுமென்றாள். 385

சேற்பொருள் போலரி சிந்தியகண்ணாய் சிதர்ந்துரைக்கு
நூற்பொரு டாம்பரி ணாமத்திரிவென நோக்குதியேற்
பாற்பொரு டான்றயி ராயபொழுதின்கட் பாழ்த்திலதேற்
பாற்பொரு ளேயின் றயிரெனச்சொல்லப் பழுததென்றான். 386

உருவப் பிழம்பப் பொருளென்றுரைப்பனிப் பாறயிர்மோர்
பருவத்தி னாம்பரி யாயப்பெயரென்பன் பாலழிந்து
தருவித் துரைத்த தயிருருவாய்மும்மைத் தன்மையதாந்
திருவத்த தென்பொரு ளாதலைத்தேர தெளியிதென்றாள். 387

பெற்றது தானுங்கும் மாயத்திரிபு பயற்றியல்டே
யிற்ற திதுவென திட்டமென்பாயிவ் விரும்மையினுந்
தெற்றெனத் தீர்ந்தோர் பொருளென்னைதேற்றினித் தேற்றிலையேன்
மற்றது வாமை மயிரெனச்சொல்லுவன் மன்னுமென்றான். 388

கெட்ட திரிட்சியுந் தோன்றியசாந்தும் பொருளெனவும்
பட்டன வப்பொருள் பையைகளேஎன்னும் பான்மையினால்
விட்ட திரள்வினுந் தோன்றியசாந்தினும் வேற்றுமையாம்
நட்டமுந் தோற்றமு நாட்டேனுருவிற்கு நானுமென்றாள். 389

திரியும் பொருள்க டிரிந்தாம்பயறுகும் மாயமுமாய்

விரியும் மெனவது வேண்டுகின்றாயறக் கேட்டமைக்கேற்
கரியும் முடையன் பயறொடுநீருங் கலந்துபெய்தா
லெரியுறு கின்றதன் றேயிதுவோவொப்ப விற்றதென்றான். 390

பருமை யுடைய பயற்றின்வழியொன்று பாவியுண்டா
யருமை யுடையவந் நீருக்குமாவியன் றோவதன்றி
யிருமையுங் கெட்டுட னாயிற்கும்மாயமு மில்லற்கனும்
பெருமையி னாலொன்று பெற்றொன்றுபேறின்மை பேதைமையே. 391

கெடுவன தோன்றுவ நிற்பன தாமுங் குணமென்றியேற்
கெடுவன தோன்றுவ நிற்பன தாங்குண மாயினற்காற்
கெடுவது தோற்ற நிலையுத றானப் பொருளெனவும்
படுவ• தாக வுரைப்ப தியாதின் பவத்ததென்றான். 392

கூறிய தெக்குண மக்குணந்தானக் குணிப்பொருளே
தேறிய தெக்குணி யக்குணிதீர்ந்தில பல்குணமும்
வேறென வொன்றென வில்வகைவேண்டுகின் றேற்கவைதா
மாறென்னுங் கொள்ளா முடிபுமொழிநின் மயக்கமென்றாள். 393

புற்கல மாய முதற்பொருடத்தமுட் புல்லினவாய்க்
கற்களு நீருந் நிலத்தொடுகற்றழ லென்றினைய
பற்பல கூற்றாற் பிறங்கிப்பரக்குந் தியமென்னையோ
வுற்றவை யொன்றொன்றி னுட்புகுமோத்துடை யாய்க்கெனலும். 394

யாத்தற் கமைந்த குணத்தின வாய வணுப்பொருள்க
ணீத்தற் கரியன நீத்த வருக்க நெறிமையினா
லேத்தற் கியைந்த விரண்டணு வாதியி னின்னணமா
மோத்திற்கிடந்த வகையிது கேளென் றுரைத்தனளே. 395

இரண்டணு வாதியி னின்னணமேறுநின் கந்தமெனிற்
றிரண்டன வாய்த்தம்முட் சென்றுடன்றீண்டு மிடத்தவைதா
முருண்டன தாமொன்றி னுள்ளும்புடையு முடைமையினாற்
றெருண்டனம் பாகுபா டுற்றற்குமென்றனன் றேரனுமே. 396

ஓரிட மாய முதற் பொருட் குள்ளும் புடையுஞ்சொல்லிப்
போ¢ட மாக்கிப் பிளப்ப னெனவும் பிதற்றுகின்றா
யாரிட மாய வறிவிற்கு மின்னண மாதலினா
னோ¢டத் தாற்பன்மை யெய்தி யுருவா நெறியுமென்றாள். 397

வண்டாயுங் கோதாய் வரைநெல்லியின் காய தங்கை
யுண்டாய போதே யுறையூரகத் தில்லை யென்பாய்
கண்டாயிம் மெய்ம்மை பிறர்காண்டற் கரிய தென்றான்
பெண்டான மீயு மறங்கொண்ட பெருமை யினான். 398

வெய்தாய தீயுங் குளிராகிய நீரும் விண்டோய்ந்
தைதாய காற்று மவையாரு மறிப வென்றாற்
பொய்யாகு மென்னா யவைபுத்த வசன மென்பாய்
செய்தாய் முழுக்கூ ழதுபோலச் சிதைக்க வென்றான். 399

கந்தின்கட்ட காணாய் களியானையை யில்லை யென்பாய்
வந்திங்க ணின்ற பொழுதுண்மை மறுக்க லாமோ
தந்திங் குரைத்த வுரைதானுங் கெடுக வென்றான்
வெந்திங்கு வித்தின் னனைத்தாகிய வீடு கண்டான். 400

ஆண்டில்லை யென்பன் னதுவுள்வழி யுண்டு மென்ப
னீண்டின்மை யுண்மை யிவையாக விசைத்து நின்றேன்
வேண்டி யனவே முடிப்பாய்விரி பொன்னெ யிலு
ளீண்டி யிமையோர் தொழுவானெம் மிறையு மென்னாய். 401

கொல்லேற்றின் கோடு குழக்கன்றது வாயி னக்கா
லில்லாகு மென்றி யிவையிங்ஙன முண்மை யின்மை
சொல்லேனு மல்லே னதுசொல்லுவன் யானு மன்னாய்
கொல்லேற தாகப் பொழுதேயுடன் கூறு கென்றான். 402

ஏறாய காலத் தெழினல்லது வத்து பேதங்
கூறாரெ ழாத குழக்கன்றினுக் கின்மை முன்னா
வீறாகி நிற்கும் முதலுண்மையிற் கின்மை யெங்கு
மாறியாது மில்லை கலைக்குண்மையு மற்றுமென்றாள். 403

கன்று முயலுங் கழுதைப்பெயர் பெற்ற னவுங்
குன்றுந் தலையுட் பெறப்பாடெய்தல் கோடு றுப்பா
வென்றும் மவற்றுக் கெழலில்லைநின் பேத மென்றாற்
சென்றுஞ் சிலவிற் சிலவின்மையு மாகு மென்றான். 404

இல்லாத கோட்டை யுளதாக வெடுத்து மென்று
சொல்லார்கள் பேதம் சொலவேண்டுவை யாயி னக்காற்

புல்லாது நில்லாப் பொருடங்களுக் குண்மைக் கின்மை
கல்லாது நீயுங் கழுதைக்கருள் செய்தி யென்றாள். 405

இல்லை வலக்கை யிடக்கைவகை யால தென்றுஞ்
சொல்லின் னதற்கு மதுவேயெனுஞ் சூழ்ச்சி மிக்கா
யொல்லை யிரண்டு முளவாக வுணர்ந்தனை நீ
நல்லை பெரிதும் மெனமொக்கல னக்க னனே. 406

இக்கை வகையா லதுதானுள தாயி னக்காற்
றொக்க விரண்டும் முடனாதலிற் றூய்தொ ருபால்
பக்கம் மதுவும் படுபாழினிக் காலு மற்றாய்ச்
செக்கின்கணைபோன்றினிச் சென்றுருள் சேம மென்றாள். 407

கைகால் வகையால் பெறப்பாடிலை காலு மற்றாய்
மெய்தா மொழிய வவைபாறெய்தல் வேண்டு தலாற்
கொய்தார் நறும்பூங் குழலாய்குழ மண்ணர் களாச்
செய்தா யுலகிற் சிறுமானுயர் தம்மை யென்றான். 408

கால்கால் வகையா லுளகைகளுங் கையி னற்றாய்ப்
பாலாய் முடியு மவைபண்டை யியல்பி னாலே
யேலா திவைதா முளவெத்திறத் தானு மென்னி
னாலாவ தான முடிவி னாயொடு நண்டு மொத்தாய்.. 409

அல்லென் றுரைத்த வுரைதானுமெம் மாக மத்து
ளில்லென்ற வாறென் றிவையிங்ஙனம் வேண்டு கின்றாய்
சொல்லன்று நாயைந் நரிதானென்னச் சொல்லு கின்றா
னில்லென்ற வாறோ நரிதன்னையு மென்ற னனே. 410

நாய்கொன் னரிகொல் லெனத்தோன்றுமுணர்வு நண்ணி
யாய்சொல் லிரண்டின் னுணர்ந்தல்லதுவன்மை யென்றாய்
நீசொல் லறியா யறிவார்நெறிநேடு கில்லாய்
பேய்சொல் லுபவே பலசொல்லிப்பிதற்ற லென்றாள். 411

பேரும் உணர்வும் பொருளில்லதற் கில்லை யென்றி
சார்வும் மகல்வுந் தலைப்பெய்தலோ டுள்ள மின்மை
நோ¢ங் கிவையு முணராமையிற் கென்ற னனாய்த்
தேரன் சிறிதே தெரிகோதையை நக்க னனே. 412

ஆத்தன் னுரைத்த பொருடன்னையவ் வாக மத்தாற்
சாத்தன் பயின்றா லறியாவிடுந் தன்மை யுண்டோ
வீர்த்திங் குரைத்த பலதம்முளொன் றின்ன தென்னா
யோத்தின் வகையாற் பெயரோடுணர் வின்மைக் கென்றாள் 413

ஒன்றி னியற்கை யொருவான்பொருட் கில்லை யென்றே
யென்று முரைத்தி யிரும்பெய்திய வெம்மை யந்நீர்
சென்றும் மறுகித் தீக்குணஞ் சேர்ந்த தற்றேற்
குன்றும் பிறவோ வினிநீண்ட கோளு மென்றான். 414

கொண்ட வுடம்போடுயிர் தானுடன் கூடி நின்றாற்
கண்டு முணர்ந்து மவையாவதென் கல்வி யில்லா
யுண்டங்க ணின்ற வுயிர்க்காக வுரைப்ப தொக்கும்
பிண்டந் நிகழ்ச்சி பிழைப்பாகு நினக்கு மென்றாள். 415

மெச்சி யிடத்தாற் பிறிதின்மை விளம்பு கின்றாய்
பிச்சை முதலாப் பெரிதாவறஞ் செய்த வன்றா
னச்செல் கதியுள் ளமரன்னெனப் பாடு மின்றே
விச்செய்கை யெல்லா மிகழ்வாம்பிற வென்ற னனே. 416

ஊனத்தை யின்றி வழங்காவுழல் கின்ற போழ்து
மானத்தி னீங்கி வதங்காத்து வருந்தும் போழ்தும்
வானத்த தாய பொழுதுமன் னுயிர தென்றா
டானத்தி னுண்மை யிதுதத்துவ மாக்கொ ளென்றாள். 417

காலம் பிறிதிற் பொருளில்லெனக் காட்டு கின்றாய்
ஞால மறியத் தவஞ்செய்தவ னல்லு யிர்தா
னேலங்கொள் கோதா யெதிர்காலத்தி னின்மை யாமேற்
சீலங்கள் காத்தல் வருத்தஞ்சிதை வாக வென்றான். 418

ஆற்ற வருந்தித் தவஞ்செய்து மரிய காத்துந்
நோற்றும் பெரிதுந் நுணுகாநின்ற பொழுதி னானும்
மேற்ற முடைய விமையானெனப் பட்ட போழ்துஞ்
சாற்றி னுயிர்தன் பொழுதே யுண்மை தங்கு மென்றாள். 419

நூறா னிரும்பாய் நிகழாமை நொடிதி யாங்கே
பாறான் றயிரா மெனநின்று பயிற்று தியான்
மாறா னுடையா ருரையொக்குநின் மாற்ற மென்னாத்

தேறார் தெருண்டா ரெனச் சொல்லினன் றேர னும்மே. 420

தத்தந் நிமித்தந் தலைப்பெய்துதங் காரி யம்மா
யொத்த பொருள்க ணிகழ்வாக்க முரைத்து நின்றேன்
பித்தனி னோப்பப் பிறிதிற்பிறி தாமென் பனோ
வித்தின் வழியா னுரைநீயும்வெள் யானை யென்றாள். 421

கூடா பொருள்கள் பிறிதின்குணத் துண்மை யென்பாய்
பாடாஅலப் புட்பத் தனவாகிய பண்பு நாற்றம்
மோடாவ தெய்திற் றெனவையமுரைக் கின்ற த•தா
னாடாது சொன்னா யதனன்மை யொழிக வென்றான். 422

போதுக்க வாசம் புதுவோட்டைப் பொருந்தினாலும்
மேதக்க நாற்ற மிதுபூவின தென்ப மிக்கார்
தாதுக்க நின்று மவைபோக்குந் ததாக தற்கென்
றேதுக்கள் காட்டி முடித்தாளிணை யில்ல நல்லாள். 423

வீட்டிட மென்று நின்னால்வேண்டவும் பட்ட தன்னை
நாட்டுவ னதுவு நாயிற்கென்றுநன் றென்றி யாயிற்
சூட்டடு நரகந் தானுஞ்சுடர்ந்தநற் சுவர்க்கந் தானும்
பூட்டின முரைத்த வக்காற்போந்ததங் கென்னை யென்றான். 424

கதியின வகைய வாறுங்கந்தபிண் டங்கள் சொன்னான்
பதியின வென்ன நின்றாய்பாக்கனாய் காட்டு தீயால்
விதியினின் விளையட் டார்தம்வீட்டிட மின்ன தென்றாற்
கதுவென்னை யென்னச் சொன்னாலாகம மல்ல தாமோ. 425

பேர்த்தினவண் வார லில்லாப்பிறவியாந் தான மென்னிற்
றீர்த்திவண் வார லின்மைசேர்விடக் குண்மை யாமோ
கூர்த்தலில் வினையி னின்மைகூறுவ னென்றி யாயி
னார்த்துள னவனே யாயினண்ணுமே வினையு மென்றான். 426

பிறப்பதை வீடு மென்னேனவ்விடம் பேர்ப்பின் றென்னே
னுறத்தகு வினைக டாமுமுண்மையா லொட்டு மென்னேன்
மறத்தலில் யோக பாவமாசதா மீட்டு மென்ப
திறப்பவும் வேண்டு கின்றேற்கெய்தல நின்சொ லென்றாள். 427

பிறக்குந்தன் ஞானத் தாலும்பின்னுந்தன் னுண்மை யாலும்

புறப்பொருள் கொண்டு நின்றுபுல்லிய சிந்தை யாலுஞ்
சிறப்புடை வீடி தென்றுசெப்புநீ தீவி னையைத்
துறக்குமா றில்லை நல்லாய்சொல்லுநீ வல்ல தென்றான். 428

நன்றியில் கார ணங்கணாட்டிநீ காட்டி னவ்வு
மொன்றுநா னொட்டல் செல்லேன்யோடுகொடு பாவ நின்றாற்
குன்றினிற் கூர்ங்கை நாட்டாற்கூடுநோ யாதிற் குண்டோ
வொன்றுநீ யுணர மாட்டாயொழிகநின் னுரையு மென்றாள். 429

கருவிதா னொன்று மின்றிக்கடையிலாப் பொருளை யெல்லா
மருவிய ஞானந் தன்னாலறியுமெம் மிறைவ னென்பாய்
கருவிதா னகத்தி னாயகடையிலா ஞான மன்றோ
மருவியார்க் கமிர்த மொப்பாய்மாற்றந்தா விதனுக் கென்றான். 430

வினையுமவ் வினையி னாயவிகலஞா னங்க டாமு
மினையவே கருவி யென்றாலிங்குநின் னுள்ளம் வையாய்
முனைவனாய் மூர்த்தி யல்லான்மூடுமே மாசு மென்பாய்
கனைகட லென்லை காணுங்காக்கையொத் தாங்கொ லென்றாள். 431

கொண்டதன் கரணந் தானுமில்லையேற் கூற்று மில்லை
மண்டினர் வினவு வார்க்குமலைச்சிலம் பனைய னென்றா
லுண்டுதன் கரணந் தானுமுரைக்குநர்க் குறுவ னென்னிற்
பண்டுசெய் நல்வி னையைப்பகவனே யென்று மென்றான். 432

தனுவெனுங் கருவி தன்னாற்றன்னடைந் தார்க டன்னை
வினவின வுணர்ந்து சொல்லும்வினையினுக் கின்ன துண்டோ
சினவினுந் தேர வொன்றுசெப்புவன் செல்க தீயுட்
கனவினு நின்ன னாரைக்காணல னாக வென்றாள். 433

முறையினா லறிய லன்னேன் மூத்தலே யிளமை சாக்கா
டுறையல வொருவன் கண்ணே யுடனவை யாக வொட்டி
னிறைவனா ருணர்வு தானுமின்மைமே லெழலும் வேண்டி
யறைதுநா மன்ன மன்னா யன்னண மாக வென்றான். 434

சீலவான் றெய்வ யாக்கைதிண்ணிதா வெய்தி நின்றார்
காலமூன் றானு முய்த்துக்காட்டலுங் காண்டு மன்றோ
ஞாலமூன் றானு மிக்கஞானவா னான நாதன்
போலுமென் றோர்தல் செல்லாய்போர்த்தனை யகமு மென்றாள். 435

நாளெல்லா மாகி நின்றநன்பொரு டம்மை யெல்லாங்
கோளெல்லாந் தானொ ருங்கேகொள்ளுமே லீர்ங்கு வள்ளைத்
தாளெல்லாந் தானொ ருங்கேதானுநல் லானோர் நல்ல
வாளினா லேறு முண்டேல்வாய்க்குநின் னுரையு மென்றான். 436

நீருநீர் தோறு முவ்வாநலையிற்றே திங்க ளென்று
மூரினூர் தோறு மொவ்வாவொளியிற்றே ஞாயி றென்றும்
யாரின்யார் கேட்ட றீவாரன்னனே யண்ண லென்றார்
தேரனீ சொன்ன தன்னம்சேரல வாக வென்றாள். 437

அளவிலாப் பல்பொ ருள்கட்காகுபண் பாகி நின்ற
வுளவெலாப் பொதுக்கு ணத்தானொருங்குகோ ளீயுமென்னிற்
பிளவெலா மாகு மன்றேபெற்றிதா மொத்த லில்லேற்
கொளவெலா ஞானந் தானுங்கொள்ளுமா றெவன்கொ லென்றான். 438

ஒன்றல்லாப் பலபொ ருளுமொத்தொவ்வாப் பெற்றி யாலே
நின்றுகோட் செய்யு மென்றானீடிய குற்ற மாகா
தென்றலா லின்ன தன்மையிறைவன தறிவு மெய்ம்மை
யின்றெலாங் கேட்டு மோராயேடனீ யென்று சொன்னாள். 439

எல்லையில் பொருள்க டம்மை எல்லையி லறிவி னாலே
யெல்லையின் றறியு மெங்க ளெல்லையி லறிவ னென்பாய்
எல்லையில் பொருள்க டம்மை யெல்லையின் றறியி னின்ற
வெல்லையி லறிவு தானு மெங்ஙன மெய்து மென்றான். 440

துளக்கில்லாப் பலபொ ருளுந்தொக்கதன் றன்மை யெல்லாம்
விளக்குமே ஞாயி றொப்பவென்பது மேலுஞ் சொன்னேற்
களக்கிவர் தன்ன மன்னாயாத்தன தறிவு மென்றென்
றிளக்கிநீ யின்னு ம•தேசொல்லுதி யேழை யென்றாள். 441

ஓதலி லுணர்வு மின்றேலூறவற் குண்டு மாகு
மோதலி லுணர்வு முண்டேலொன்றுமே பலவும் வேண்டா
மோதலி லுணர்பொ ரூடாமுள்ளவும் மில்ல வும்மே
லேதமா மில்பொ ருண்மேனிகழ்ச்சிதா னிறைவற் கென்றான். 442

சென்றவக் குணங்க டாமுஞ்செல்லுமக் குணங்க டாமு
மன்றையக் குணங்க டாமுமப்பொருட் டன்மை யாலே

நின்றதன் ஞானந் தன்னானிருமல னுணரு மென்றாற்
பொன்றின வெதிர்வ வென்றல்பொருள்களுக் கில்லை யென்றாள். 443

பிறவிதா னொன்று மில்லான்பெரியனே யென்று நின்றான்
மறவிதா னில்லை யோனிமன்னுநான் கென்னு மில்லா
னறவியா யுந்த நூலுள் ளாத்தனா மாயி னக்காற்
புறவினிற் புரளுங் கல்லும்புண்ணிய னாக வென்றான். 444

பிறத்தலே தலைமை யாயிற்பிள்ளைக ளல்ல தென்னை
யறக்கெட றான தென்னிலட்டக வித்து வெந்தாம்
புறப்படும் போர்வை யாலேற்புண்டொழு நோய ராகச்
சிறப்புடை யண்ண றன்னைக்கல்லெனச் சொல்லு வாய்க்கே. 445

அடைவிலா யோனி யானாயாருமொப் பாரு மின்றிக்
கடையிலா ஞான மெய்திக்கணங்கணான் மூன்றுஞ் சூழ்ந்து
புடையெலாம் போற்றி யேத்தப்பொன்னெயிற் பிண்டி மூன்று
குடையினா னிறைவ னென்றாற்குற்றமிங் கென்னை யென்றாள். 446

கோதியிட் டுள்ள தெல்லாங்குண்டல கேசி யென்பா
ளாதிசா லாவ ணத்துளார்கதர் தம்மை வென்ற
வீதியீ தென்று சொல்லிவீழ்ந்தனை நீயு மென்றா
ணீதியாற் சொல்லி வென்றநீலமா கேசி நல்லாள். 447

பேதைக ளுரைப்பன வேசொல்லிப்பெரிதலப் பாட்டினைநீ
பேதைமற் றிவன்பெரி தெனப்படும்கருத்துடை மிகுதியினாய்
தாதையைத் தலைவனைத் தத்துவதரிசியைத் தவநெறியி
னீதியை யருளிய நிருமலன்றகைநினக் குரைப்ப னென்றாள். 448

பகைபசி பிணியொடு பரிவின பலகெட
முகைமலர் தளிரொடு முறிமரம் வெறிசெய
மிசைநிலம் விளைவெய்த விழைவொடு மகிழ்வன
திசைதொறு மிவைபிற சுகதன செலவே. 449

குழுவன பிரிவன குறைவில நிலையின
எழுவன விழுவன விறுதியி லியல்பின
வழுவலில் பொருள்களை மலர்கையின் மணியென
முழுவது முணருமெ முனைவர னறிவே. 450

நிறைபொறி யுளவவை யறிதலி னெறிமைய
முறைபொரு ணிகழினு முறைபடு மறிவிலன்
மறைபொரு ளுளவவ னறிவினை மறையல
விறைபொருண் முழுவது மறிதிற மிதுவே. 451

பிணிதரு பிறவிய மறுசுழி யறுவதொர்
துணிவிது வெனநம துயர்கெடு முறைமையு
மணிதரு சிவகதி யடைதலு மருளுதல்
பணிதரு பரமன தருள்படு வகையே. 452

சொரிவன மலர்மழை துளிகளு நறுவிரை
புரிவன வமரர்கள் புகழ்தகு குணமிவை
விரிவன துதியொலி விளைவது சிவகதி
எரிவன மணியிதெ மிறைவன திடமே. 453

அரசரு மமரரு மமர்வனர் வினவலின்
வரைவில பிறர்களு மனநிலை மகிழ்வெய்த
உரைபல வகையினு முளபொரு ளுணரவொர்
முரைசென வதிருமெ முனைவரன் மொழியே. 454

வினையிரு ளடுவன விரிகதி ரியல்பொடு
கனையிருள் கடிவன கடுநவை யடுவன
மனையிரு ணெறிபெற மதிகெட வடைவன
வினையமெ யிறையவ னிணையடி யிவையே. 455

ஆத்த னிவனென் றடிக ளிடமிசைப்
பூத்தனைத் தூவிப் பொருந்து துதிகளி
னேத்துநர் கண்டா யிருவினை யுங்கெடப்
பாத்தில் சிவகதிப் பான்மைய ரென்றாள். 456

ஏந்த றிறங்க ளிவையே லமைந்தன
போந்த வகையாற் பொருளும் பிழைப்பில
வீந்த விவற்றினின் வேற்றுமை வீட்டிற்கு
மாய்ந்த வகையா லறிவிமற் றென்றான். 457

வித்தென்றும் வெந்தால் முளையல தாயெண்மை
யொத்தினி துண்டா முயிரும் பிறப்பின்றிச்
சித்தி யகத்துச் சிதைவிலெண் டன்மையி

னித்திய மாகி நிலையுள தென்னாய். 458

ஒக்கு மிதுவென வுள்ளங் குளிர்ந்தின
மொக்கலன் சொல்லுமிம் மோக்கத்தைப் பாழ்செய்த
தக்கில தாகுந் தலைவ ரியல்பென
நக்கன னாய்க்கென்று நன்னுத லென்றான். 459

பண்டே யெனக்கிம் மயக்கம் பயந்தவன்
கண்டார் மயங்குங் கபில புரமென்ப
துண்டாங் கதனகத் தோத்துரைக் கின்றனன்
றண்டா தவனொடு தாக்கெனச் சொல்லி. 460

சிறப்பின தென்பதைச் செப்பலுந் தெற்றெனப்
பிறப்பறுத் தின்பெய்தும் பெற்றியின் மிக்க
வறப்புணை யாகிய வாயிழை யாயான்
மறப்பில னென்று வலஞ்செய் தொழிந்தான். 461

அருளே யுடைய னறனே யறிவா
டெருளா தவரைத் தெருட்டல் லதுவே
பொருளா வுடையாள் புலனே நிறைந்தாள்
இருடீர் சுடர்போ லெழுந்தா ளவன்மேல். 462

----------

## 6. புத்த வாதம் (463- 658)

அணிநா டிவைதா மறல்யா றிவைதாம்
பிணிநா டிவைதாம் பெருங்கா டிவைதாம்
மணிமா மலைதா மெனவே வருவாள்
அணியார் சுகதன் நகரெய் தினளே. 463

பறையின் னொலியும் படுகண் டிகையுஞ்
சிறையின் மிகுமா லிதுசெம் படர்கள்
இறைவன் னுறையு மிடமா மெனலும். 464

மழைசேர் நகரம் மலைபோன் றனவே
கழைசேர் கொடியுங் கதலிவ் வனமே
விழைதா ரவரும் விரிகோ தையரும்
முழைவாழ் புலியே மயிலே மொழியின். 465

நெடுவெண் டிரைமே னிமிருந் திமிலுங்
கடுவெஞ் செலவின் னுலவுங் கலனும்
படுவண் டறையும் பொழிலும் மெழிலார்
மடுவுந் திடரும் மணல்வார் புறவும் 466

கயன்மீ னிரியக் கழுநீர் விரியும்
வயன்மாண் புடைய வளமைத் தெனவும்
முயன்மீ னெறியு முறியுங் கறியா
தயன்மே யுறையா தணியிற் றெனவும். 467

கழுகின் னினமும் கழுதின் னினமும்
முழுதும் மறுவை பலமூ டினரும்
கொழுதின் னிணனும் பிணனுங் குலவி
இழுதென் னெலும்பா ரிடுகா டெனவும். 468

சாதியே மிக்க தடுமாற்ற வெந்துயர
மோதியே வைத்தாரவ் வோத்தெலா மீக்கிடந்த
வீதியே காணலா மென்றாளா னின்றாரும்
போதியா ரீண்டைப் புலால்பழியா ரென்றலும். 469

அங்காடிப் பண்டவூன்றின்ன வறமுரைத்தார்க்
கிங்காடி வாழ்வனவுமூனாய்வந் தீண்டியவாற்
கொங்காடத் தேனறையுங்கொய்ம்மருதம் பூவணிந்த
பொங்காடை போர்த்தார்க்குப்பொல்லாதே யென்னீரோ. 470

விலைபடைத்தா ரூன்வேண்ட வவ்விலைதான் வேண்டி
வலைபடைத்தார்க் கெம்முயிரை வைக்கின்றா மின்ன
கொலைபடைத்தா னோகொடிய னென்பனவே போலத்
தலையெடுத்து வாய்திறப்ப தாமிவையோ காணீர். 471

தன்றார மீந்தான் றனக்குறுதி யாவதனை
யொன்றானும் வேண்டான் பிறர்க்கே யுழந்தானூன்
தின்றானுந் தீவினையைச் சேருமெனச் சொன்னாற்
பொன்றாவாய்ப் பல்விலங்கும் பூமிமேல் வாழாவோ. 472

உரிதா வுணர்ந்தானொன் றோரா துரையான்
பரிவே யிதுவுந்தன் பாலரோ டெல்லா

மெரிதோய் நரகம்பா ழேற்றுவா னேயாம்
பெரிதா மளியன் பெருந்தகைய னேகாண். 473

கொடைக்கொட்டி விற்பானுங் கொள்வானு மன்றி
யிடைச்செட்டி னாற்பொருளை யெய்துவான் போல
முடைக்கொட்டி முத்துரைத்து மூடிக்கொண் டேகுங்
குடைச்சிட்ட னாருயிர்க்கோர் கூற்றமே கண்டீர். 474

ஆடுவார் காண்பா ரவரருகே தான்சென்று
தோடுவார்ந் தாலொப்பச் சொல்விரிப்பான் போற்பாவம்
கூடுவார் கூடாதார் கொன்றார்தின் றாரென்னும்
சேடனார்க் காண்டுநா மென்றுதான் சென்றாளே. 475

அணிசெய் கோழரை யரைநிழ லழகனைப் பொருந்தி
மணிக டாம்பல கதிர்விடு மலருடை மணைமேற்
றுணிவு தோற்றினை யெனச்சிலர் துதியொடு தொழுது
பணிய யாதுமோர் பரிவிலன் படம்புதைத் திருந்தான். 476

ஆத்த னேயெனத் தெளிந்தவ ணமர்ந்திருந் தவர்க்குச்
சூத்தி ரம்மிது வினையமு மிதுவிது பிறிதாஞ்
சாத்தி ரம்மிவை மூன்றென வன்றவத் தோன்றல்
பாத்து ரைக்குந்தன் பதப்பொருள் பலவகைப் படவே. 477

கந்த மைந்திவை கணிகத்த வாமெனக் கரைந்து
முந்தி நாடினோ ருணரவல்ல தில்லையென் றுரைத்தும்
புந்தி யாலங்கோர் புற்கல னுளனெனப் புணர்த்து
மந்தி லாற்சொலாப் பாட்டினோ டியாதுமில் லெனவும். 478

தத்து வம்மிவை தாமெனத் தமர்களுக் குரைக்கும்
புத்த னார்தம்மை புயலிருங் கூந்தலி பொருந்திப்
பித்தர் போற்பல பிதற்றினீர் பிதற்றிய விவைதா
மெத்தி றத்தினு மிசையின்மை யிசைக்குவ னென்னெவெ 479

ஓதி னீர்சொன்ன கந்தமைந் துளவெனி னுருவே
வேத னையொடு குறிசெய்கை யிலவென விரிப்பும்
போதியா லங்கோர் புற்கல னுளனெனப் புணர்ப்பும்
யாது மின்மையோ டவாச்சிய மறும்பிற வெனவே. 480

ஐந்தில் யான்சொன்ன பலகளு மமைவில வெனினும்
கந்த முண்மைக்கட் கருத்துள தாம்பிற வதனாற்
சிந்த மாயவு முளவெனத் தெளியினி யெனலும்
நந்த னார்க்கற முரைத்திர்நீ ரோவென நக்காள். 481

இட்ட நீபல வுரைத்தனை யிவற்றுளொன் றொழிய
நட்ட மாயினு நன்மையை நின்வயிற் றருவோய்
குட்ட மேமுழு மெய்யினு மெழுந்தவன குடுமி
தொட்டி யானெனி னுந்தூய னோவது மாமோ. 482

நல்ல வேயென நாட்டிய கந்தமிவ் வைந்து
மில்ல வேயெனத் தெருட்டுவ னெடுத்துரை யெனத்தான்
சொல்ல வேதுவ ராடைகண் மூடிய சேடன்
மெல்ல வேயிவை கேளென விரித்தவ னுரைக்கும். 483

உருவே திரிவே தனையா றுணர்வும்
மருவா தனமாண் குறியத் துணைசெய்
இருவே றவைசெய் கையிரு பதுமாந்
திருவே யிவையெம் பொருடே ரெனவும். 484

முறைசெப் பியவைந் தினுண்முன் னையுரு
வரையிற் பலவட் டகமுள் ளுறுத்த
விறைபட் டனவெட் டெனவொட் டினகே
ணறையிற் பொலிகோ தைநறுந் நுதலே. 485

நிலநீ ரெரிகாற் றோடுரு விரதந்
நலமா கியநாற் றமொடூ றிவைதா
மிலவே யவையெட் டினும்விட் டதிறஞ்
சொலவா முடன்கேட் டொடுதோற் றமுமாம். 486

வலிதா நிலமை யதுநீர் வெய்துதீக்
கலியே தருகாற் றியக்கம் கருமப்
பொலிவேற் பொறையயர்த் தல்புலர்த் துளர்த்தன்
மலிபூ தங்கணான் கின்மாண் பின்னவையே. 487

இனிவே தனையா வனவின் படுமொடு
துனிவே தருதுன் பமுமா மிடையுன்
நனிதா நலதீ வினையன் மையினாம்

பனிவே யிணைபன் னியதோண் மடவாய். 488

அறிவா வனதா மினியா வெனினைம்
பொறியோ டுமனம் மிவைபுல் லினவேற்
குறிதா மிவையா றினுங்கூறுவதென்
னெறியா மிவைநீ லறிகர்த் தகணாய். 489

குயலா குயலம் மெனக்கூ றும்வினைப்
பயனாற் பலபா கெனப்பட் டவைதா
மயலா மனமே வசிகா யத்தினா
மயலா ரிதாவை மினியா ரறிவார். 490

கடனா கியகந் தமிவைந் துகளும்
உடனே யவைதோன் றியொரு கணத்துட்
கெடுமே யவைகேட் டினும்வாட் கணல்லாய்
சுடர்மே யசுடர்ந் நுதிபோன் மெனவும். 491

கவையொப் பனவை விரலைந்து களும்
இவையிப் படிக்கைப் படியென் றதுபோ
லவையப் படிக்கந் தங்களைந் துகளும்
நவையைப் படுநல் லுயிரா மெனவும். 492

அவைதா நிலையா துயரா மசுவம்
நவையா ருயிர்நாட் டிலங்காட் டமிலை
யிவைநான் மையென்வாய் மையிவ்வா றுணர்வா
ரெவையே செய்துமெய் துபவீ டுமென்றான். 493

பல்லியல் பாகிப் பரந்தவைங் கந்தமுங் கந்தங்கடாம்
புல்லிய வொற்றுமை யிற்குறி யாகிய பொய்யுயிருஞ்
சொல்லிய கேட்டவள் வேட்டக் குரம்பை சுடுபவர்போ
லல்லியங் கோதைநின் காட்சி யழித்திடு வேனெனத்தான். 494

பிண்டம் பிரிவில வேயெனச்சொல்லுத லாலவற்றுக்
குண்டங் கொருகுணி யாங்கவை தாங்குண மாகுமன்றேல்
விண்டங் கவையவை வேறுளதாதலும் வேண்டுமன்றோ
பண்டங்கு நீசொன்ன முட்டியிற்பஞ்சாங் குலிகளும்போல். 495

பூதன்கும் புகுந்தே தெருல்லலுற் றயவற்றுக்

கேதமி றன்மை கரும மிரண்டா வியைந்தவை
பேதமு மாமென்ற பெற்றியி னாற்பொரு ளிற்றென்றலாற்
சாத மாமுயிர் தன்மையிற் றேற்ற தவறெவனோ 496

நின்சொல்லப் பட்ட வலிப்புந் தரிப்பு நிலத்தினவே
லென்சொல்லப் பட்ட வுணர்வொடு காட்சி யுயிரனவா
முன்சொல்லப் பட்ட நிலந்தா முடியின் முடிவுளதாம்
பின்சொல்லப் பட்ட வுயிரும் பெரிய பிரச்சையினாய். 497

வற்பமல் லானில மில்லெனச் சொல்லுவ னாங்கதுபோற்
பொற்ப மிலாவுயிர் தானுமில் புத்திய லாலெனலும்
வற்பமலா நிலமன்னுந் தரிக்குமென் பாயல்லையோ
கற்பமெல் லாம்பிறர்க் கேநின் றுழந்த கருணையினாய். 498

உரிய வலிமையல் லானில மோரல னென்றிருந்தாற்
பெரிய நிலத்தை யறிவிக்கும் பெற்றியில் லாய்பெரிது
மரிய வுயிரை யறிவுறக் காட்டென்றி யெப்பொருளும்
தெரியக் குணமுகத் தாலன்றி யென்றுந் தெருட்டுளதோ. 499

விருத்த நிலைமையும் வேண்டலம் யாமென வேண்டுகின்றீ
ரருத்த மெனக்கொண்ட வட்டகம் யாவையும் விட்டில
றிருத்தமி றீவயி னீருறை திட்ட விரோதமன்றோவாற்
பொருத்தம லாதன வேசொல்லும் புத்தநின் புத்தியிதோ. 500

தன்மை கரும மவற்றன வேயென்ற றானென்னைவே
றின்மை முடியினெ னிட்டமுரைப்பினுங் கெட்டதென்னோ
மன்னுமந் நான்கு மறுதலை தத்தமு ளாதலினா
லென்னு மியல்பும் பயனு மழிக்குமென் பேனல்லனோ? 501

ஊரிது காடிது தானென லென்னை யொருங்குளவே
னீரிது தீயிது தானென லாமோ நிகழ்வுடனே
யாரிவை கேட்டறி வாரவை யட்டக மென்னினலாற்
போ¢து வேயெனச் சொ;லுத றானும் பிழைக்குங்கொலோ. 502

தொக்கவை யாயுட னேயவைநிற்பினு மாங்க வற்றுண்
மிக்கத னாற்பெயர் சொல்லுவன்யானென்று வேண்டுதியேற்
புக்கன தாம்பொறி யானின்புலமன்றிப் பொய்யெனத்தா
னக்கனர் சாக வெனுநீயுரைக்கு நயங்க ளென்றாள். 503

உருவுடை யட்டக மன்றியுமைந்தினுட் பட்டவெல்லாம்
மருவொடு கூடியுந் தீண்டியுமாக்குந் திறமரிதான்
மருவுடை யார்களை மாயங்கள்சொல்லி மருட்டியண்ணுந்
திருவுடை யாயவ காயத்துத்தேரை யடித்தெருட்டாய். 504

திரிவே தனைகளுந் தீராநுமக்குள வாதலன்றே
கரிவே தனையவர் காமுறுகாமங் கடிந்ததுதான்
பரிவே பெரிதுடை யீர்முன்னுரைத்தபல் செய்கைகளின்
விரிவே யவையோரின் வேதனைவேறில்லை யாம்பிறவே. 505

உணர்ச்சியி னாற்செய்கை யாக்கியச்செய்கையி னாலுழப்பாம்
உணர்ச்சியி னாங்கோர் பொருட்சுவடுள்ளது போல்கின்றதா
லுணர்ச்சியொ டல்லன வொன்றொன்றில்நோக்கில வாமெனினு
மிணர்ச்சி யிழந்து பிறபிறவாகிப் பெறலிலவே 506

ஆறினி னொறே நிகழும்பொழுதினல் லாவுணர்வு
தேறின வாறவற் றுண்மையெனக்குத் தெருட்டனலிந்
தாறின வோவில்ல தாழ்ச்சியினாலுள தாமெனினீ
கூறிய வாற்றா லுயிருண்மைகூறலுங் குற்றமென்னோ. 507

ஓருணர் வுள்ள பொழுதினொழிந்த வுணர்வுகடம்
பேரு முணரப் படாமைபெற்றாமென்னும் பேச்சுமுண்டா
லீருணர் வில்லை யிருமூன்றொருங்குள வென்றுரைக்கு
மோருணர் வேயுடை யீர்சொற்களொன்றொன் றழிப்பனவே. 508

ஒன்றே யுணர்வாய் நிகழற்குக்காரண மவ்வுணர்வாய்
நின்றே யறிவான் றனிமையினாலெனத் தோற்னிநீ
யன்றே யெனினவை யாறுந்தமுண்மையின் வேறென்னலாற்
சென்றே புலந்தலைப் பெய்தலறிவுடன் சீர்க்குமன்றே. 509

இச்சையில் லாமையி னெல்லாமொருங்குண ராவெனினு
மிச்சையெல் லாத்திற்கும் வேறேலொருங்குட னெய்துமன்றி
யிச்சையெல் லாத்திற்கு மொன்றேற்குணிப்பொரு ளிச்சையென்றாய்
தச்சனஞ் சிச்சா ரகழ்கள்வனென்கின்ற தன்மையினாய். 510

பிறந்து பிறந்துநி னிச்சைகெடலன்றிப் பின்னொன்றின்மேற்
சிறந்து சிறந்தாங் குணர்ச்சிவிரியுந் திறமரிதாற்

கறந்த கறந்த கலஞ்சுவைத்திட்டாற் கறைக்கலங்க
ணிறைந்த நிறைந்தவை பாறயிர்மோரெனத் தானென்னையோ. 511

எல்லா வுணர்ச்சியு மிச்சைவழியா லெழுமெனலா
லில்லாம் பிறநுன திச்சையுமிச்சைமு னின்மையினால்
வல்லா யிதற்குமுண் டாயின்வரம்பின்மை யாமதனாற்
சொல்லா விடுந்திற மென்னோவிரிவிற்குச் சூனியமே. 512

வெளிப்பட்டு நின்றதொன் றன்றியொழிந்தவிஞ் ஞானங்கடாங்
குளித்தன தாங்கொள்ளப் பாடின்மையாலின்மை கூறிநின்றேற்
களித்தவை தங்களுக் காலயமாலய மாமெனநீ
யொளித்தனை கொள்ளலுற் றாயுயிர்தன்னையோர் பேருரைத்தே. 513

இருளுடை மாலைக்கண் டோன்றாதெனக்கென நண்பகலே
பொருளுடை யார்பொருள் கொள்வானகழுநன் போன்றிலையோ
வருளுடை யார்சொல்லு மாருயிராலய மென்றிருக்கும்
மருளுடை யாய்நின் மாண்பழிந்தெற்றான் மயங்கினையோ. 514

மூக்கொடு நாமெய்யும் மூன்றுந்தம்மூன்று புலன்களையும்
தாக்கிய போழ்தே யறிதலுந்தத்துவ மாமென்றியா
லாக்கிய மூன்றி லறிவுமரூவா லவையொருவாப்
பாக்கியஞ் செய்தாய் பரிசங்கள்கொள்ளும் பரிசென்னையோ. 515

உற்றில வாயொலி கொள்ளுஞ்செவியென வோதுகின்றாய்
கற்றிலை மெய்ம்மைநீ கட்புலந்தன்னோடோர் காலத்தினாற்
பெற்றில நாமதன் பின்கொளறானும் பெருந்தவத்தாய்
மற்றிது தான்றன் பொறியுறுகாறும் வரலினன்றே. 516

வாய்த்துரை யீதென வாமனிதுசொல்லும் வந்துறுமேற்
சேய்த்தெனக் கோடலுஞ் சேராதொலிசெவிக் கண்ணதெனி
னீத்தன தாமல வாயினுநீசொல்லு முற்றறிவின்
றீத்தனைப் போலவுந் தேறென்றவனைத் தெருட்டினளே. 517

பெற்ற வெழுத்தேற் பிரிவின்கணாறாம் பெயர் நுனது
முற்ற வுணர்ந்து முடித்துரையென்னை முதலெழுத்துப்
பற்றின சித்தம் பலவுணர்ந்தேயவை பாழ்படலாற்
கற்றினி யெல்லாக் கணக்குங்கலந்துரை காண்பென்னையோ. 518

ஓதிய கந்தங்க ளொற்றுமையாலுயி ரென்றதுபோற்
போதிய னாய்நின்னைப் புத்தனென்றாலது பொய்பிறவோ
வாதியி னாம்புத்தி யாவதல்லாலந்தத் தன்களையா
நீதியி னாற்சொல்லி நின்றுநின்பேறு முணர்விலையே. 519

அன்றியு நின்சொ லறிபொருடானில வாதலினா
லொன்றி யுரைத்த வுனக்குமெனைத்து முணர்வருமை
யென்றினி யாமுந் தெளிந்தோமிதனா லெனவுரைத்தாள்
வென்றி யுடையன வல்லதுசொல்லா விரிகுழலே. 520

ஆறுகுறி யாவனவு மாயபுலந் தாமும்
கூறுகுறி மாறுமவை கொள்ளும்வகை தாமும்
மாறுகுறி மாறிக்குறி யென்றுமயக் காதே
வேறுகுறி தாமுணர்வின் விள்ளுவ லினிக்கேள. 521

கண்ணின்குறி மூக்கின்குறி மெய்யின்குறி செவியி
னண்ணுங்குறி நாவின்குறி காடின் மனத்தோடு
மெண்ணுங்குறி யாவனவிவ் வாறுமெனக் கொண்ணீ
பண்ணின்குறி யேசுமொழிப் பாவையெனச் சொல்லும். 522

அறிவுகுறி யென்பனவி னாயபுல மொன்றே
லறிவுகுறி யென்பனவு மாகுமவை யொன்றே
பிறிதுகொளு புலமுள்ள தாகுமெனிற் பேதம்
சிறிதுநெறி காட்டினது செல்லுமெனச் சொல்லும். 523

உண்மைகுறி கொள்ளுமுணர் வின்புலம தெய்தா
தெண்ணினுணர் வோடுகுறி யிவ்வகைய வென்னி
லுண்மையுணர் வின்புலமோ டொன்றெனில தொன்றே
நண்ணலில வேலுணர்வி னாயபுல னின்றே. 524

ஒருங்குகுறி யோடுணர்வுதோன்றியுடன் கொள்க
வொருங்குபுலந் தோன்றியவையொத்தகெட லானா
லொருங்குகுறி யோடுணர்வுதோன்றலில வாமே
லொருங்குபுலந் தோன்றுதலினொன்றுமுணர் வில்லை. 525

உள்ளுஞ் சொல்லுடம் பென்றிவை மூன்றினாற்
கொள்ளு நுங்குச லாகுச லங்கடா
மெள்ளி னேரு மிவையின்மை காட்டுவே

னுள்ளக் காக வுரைத்தவம் மூன்றினுள். 526

வேண்ட லேயென்றும் வெ•குத லாயினா
லீண்டி நின்றநி னித்தொடைப் பாடெலாந்
தீண்ட லன்னெனத் தீண்டிய வந்தவோ
வீண்டை யேநிற்ப வி•து மறிகிலை. 527

நன்மை வெ•குதல் நன்றெனச் சொல்லுலு
மனமை வெ•குத லன்றெனக் கூறலு
மின்மை யால்வெ•க லென்றதுந் தீமையி
னின்மை யாய நெறிமொழி நீயினி. 528

தீய வாய வெகுளியை யொப்பன
மாய மான முலோப மனத்தன
காய்வு செய்திலை கண்டுநின் கள்ளமே
நீய வையவை நேர்தலி னாம்பிற. 529

காட்சி நல்லன் காண்ட லனைத்தினு
மாட்சி யாமெனின் மன்னும• தொட்டுவேன்
வேட்கை யாலிது நன்றென வேண்டினு
மாட்சி யொட்டி வழித்தன னல்லனோ. 530

பொய்கு றள்ளே கடுஞ்சொற் பயனில்கொ
னைத லில்லன நான்கிவை நாவினாஞ்
செய்கை தீயன வாமெனச் செப்பினீ
ரைய நன்மையென் றீரவற் றப்புடை. 531

மண்டை கெண்டிகை மாட மடாமனை
கொண்டை குண்டிகை கூறை குடங்கடை
யுண்டி கட்டி லுடம்புயி ராதிய
பிண்ட மாய பிறபிற யாவையும். 532

கூட்ட மான குறியெனி னலதை
பூட்ட லங்கோர் பொருளின்மை வேண்டியு
மீட்டு மீட்டிவை சொல்லின மெய்யுரை
நாட்டு மாறென்கொ லோவிளி நாசநீ. 533

நிலம்பொய் நீர்பொய் நெடுநகர் தாமும்பொய்
கலம்பொய் காற்றொடு தீயும்பொய் காடும்பொய்
குலம்பொய் யேயெனக் கூறுஞ்செங் கூறையாய்
சலம்பொய் யன்றிதொன் றேநுங்கள் சத்தையே. 534

குற்ற மென்ற குறளையே யொப்பன
மற்றுஞ் சால வுளபிற மாண்பில
வொற்றைப் பெண்ணுரை யாடுதல் போகங்கள்
கற்ற லேகடுஞ் சொல்லின்ன காத்தலும். 535

பையச் சொல்லுத னல்வினைப் பாலென்றா
லெய்யக் குற்ற வெறியப்புணர்க்குங்கால்
வையத் தீயாவரு மந்திர மாமவை
செய்யச் சொல்லுநர் செவ்விய ராபவோ. 536

கடுக்கத் தாமடி கள்ளெனக் காய்ஞர்யா
ரொடுக்கச் சாம்பிவை தாலுவப் பாரில்லை
கொடுக்க வென்றல் குசலமன் றென்பதோ
படுக்க லுற்ற பதகநின் பாடமே. 537

களபாவ மாம்பய னில்லன சொல்லலேற்
பூவ மேபொருள் கைக்கொண்டு புற்கலர்
சாவச் சொல்லுவ தத்துவ மாம்பிற
வேவ னன்றென்றி யொப்பவொன் றில்லையேல். 538

காயத் தாற்கொலை காமங் களவென
நீயத் தாசொன்ன நேருந் திறமென்னோ
மாயத் தான்மன மின்றி யவையவை
தேயத் தியாருளர் செய்பவை ரென்பவே. 539

வழிமுள் ளூன்றன் மனைசுடன் மாந்தரைக்
குழியு ளூந்துதல் கோயிற் கலஞ்செய்த
லொழிவில் யானைமுன் னோட்டலோ டின்னவும்
பழியும் பாவமு மாக்குவ வல்லவோ. 540

ஒன்றி நின்ற வுயிரை யுயிரிது
வென்று சிந்தித் தழிப்ப னெனவெண்ணி
நன்றி யி•றொழி றேற்ற நவையினாற்

கொன்ற தேகொலை யென்றைந்திற் கூறினாய். 541

தேவ னையிவன் றேவ bனனவெண்ணிப்
பாவனையிற் பணியு மனத்தனாய்த்
தூவென மும்மையே தோற்றித் தொழானங்கோர்
தாவ னைதொழு தான்றவ றெய்துமோ. 542

ஒத்த வன்றனை யுறுபகை யேயெனக்
குத்தி னாற்குங் கொலைவினை யில்லைனப்
புத்த னீருரைத் தீரங்கோர் புற்கலன்
செத்த வாறது சிந்திக்கற் பாலதே. 543

கொன்ற பாவமுண் டாயின் குறட்கண்ணும்
ஒன்று மேயென் றுரைப்பனெப் பாரியார்
பொன்றினும் புத்த ரேநீவி¡; சொல்லின
சென்று சேர்தலைச் சித்தம தின்மையால். 544

பட்டி லன்பகை யாலெய்து பாவமங்
கொட்டி நீயவ் வுயிர்க்கொலை யாலென்னில்
துட்டனைத் தொழு தோன்றுறந் தானெனக்
கெட்ட னன்னிது கேட்க வினைநிலை. 545

ஆய்ந்த வைந்தினு மாம்வினை யார்ப்பெனின்
வீய்ந்த தின்மையின் வெய்ய வவீசிதான்
காந்தி பாலி யிரங்கக் கலகனைப்
போழ்ந்து கோடல் பொருந்தல தொக்குமே. 546

கொல்வ னென்றவன் கூர்ம்படை குன்றினுஞ்
செல்வ னென்றய லார்மனைச் சோ¢னுங்
கல்லு வானொ டெல்லார்க்குங் கருவினை
சொல்லு வானோ டுலகமுஞ் சுற்றமே. 547

துப்பி னால்வினை சொல்லலன் யானென்று
வப்பி னார்முலை காய்வது வாமனீ
யிப்ப லாரிடை யென்னையி தென்பதோ
செப்பி னாலுஞ் சிதைகின்ற தில்லையால். 548

பண்டு தான்வைத்தப் பண்டத்தை யொப்பதொன்
றுண்ட தாயி னதுவது வேயெனக்
கொண்டு போகினுங் கொள்ளினுங் குற்றமில்
கண்ட போழ்துங் களவன்ற தென்றலால். 549

பஞ்சி மெல்லடி நோவப் பகனடந்
தஞ்சி லோதியு மல்க வவளெனத்
துஞ்சு மில்லுடை யாளைச் சுமந்துபோய்
வஞ்சி யான்கொள்க வாழ்கபுத் தன்னென. 550

கந்த மாவன காகதந் தம்மெனப்
பந்த மின்மையிற் பாழ்செய்திட் டேனினி
யந்தி னீசொன்ன வாரிய சத்தையுஞ்
சிந்தை யுஞ்சிதைப் பேன்சில சொல்லினால். 551

பிண்டமொன் றாயினும் பிரியநோக் கின்னது
கொண்டுநின் றாம்பிற கூறினைந் தேயெனக்
கண்டநா மெய்ம்மையுங் காட்டுவா யீங்கெனி
னுண்டுதா மாகுல முணர்வுதான் கூறுவோம். 552

முழுதுந்துன்பம்மென மொழியின• தாகிய
பொழுதினா னல்லவும் புல்லுமா மாதலாற்
பழுதுதா னவ்வுரை பன்மைதா னின்மையில்
இழுதையா னான்குள வென்றுசொன் னாயென. 553

உழப்புமூன் றும்முட னொக்கநோக் கின்னது
வழுக்கில்லா வாய்மையேல் வாய்மை சொல்லியினி
யிழுக்கினாய் நீபிறர்க் கின்பமீந் தேனெனல்
பழுக்களே காய்வது ண்டுமுண் டேபிற. 554

துக்கமே யாயினாற் றொழிலுமொன் றாய்ப்பய
மொக்கவே வேண்டுமா லுயர்விலாக் கீழ்க்கதி
புக்குவீழ்ந் தார்பிறர் பொங்கிநின் றாரெமர்
மிக்கதே யென்னெறி யென்றுவேண் டல்லெவன. 555

உறுதிகூ றல்லொழி யொழுக்கங்காத் தல்லொழி
யிறுதியி• றுன்பமே யின்பமில் லாயினாற்
சிறிதுநீ தீப்புகாய் சேர்வதென் னைந்நிழல்

இறுதியில் லாத்துய ரின்னசெய் யாயினி. 556

தூய்மை யில்லை முழுவது மென்பதை
வாயும் நீசொல்லும் வாய்மைய தாயினாற்
றாமஞ் சாந்தம் புனைபவர் தாமெலாம்
ஏம நன்னெறி கண்டில ரேபிற. 557

ஓது மோத்து மொழுக்குநின் னுண்டியுங்
கோதில் தூய்மைய வாமெனக் கூறியும்
யாது நீயசு வாமெனச் சொல்லுவாய்
நாத னீபிற நன்கறிந் தாயவை. 558

நீயி னேசொன்ன மெய்ம்மையை நோக்கிலார்
தூய்மை யாம்பிறர் தூய்மை யிலரென்று
காய்ப வேகவி மண்டைகள் என்றனள்
வேயி னன்மை விலக்கிய தோளினாள். 559

சென்ற சென்றுன செந்நெறி கண்டவர்
பின்றைத் தூய்மை பெறுவது மில்லையே
லின்று மின்று மியல்வது வாக்கொள்வாய்க்
கின்றித் தூய்தன்மை யென்னை யிழைத்ததோ. 560

அழுகு பூசுமி னங்கண மாடுமின்
கழுகு ணூத்தையோ டேனவுங் கவ்வுமின்
மெழுகு மின்னிடை மெச்சிய மல்லதின்
முழுதுந் தூய்தன்மை சொல்லிய மூடர்கள். 561

நில்லா வென்னி னில்லன்மையாலும் நில்லாவா
யில்லா மென்ற லின்புறு மேற்கோ ளிழுக்காகு
மெல்லாந் தானே யென்றலி னேன் விழவெய்தி
நல்லாய் சொன்ன நான்மையை நாட்டுந் திறமென்னோ. 562

உழுவார் வணிக ரென்றிவ ருள்ளிட்டுலகத்துள்
வழுவார்க் கீய வான்பொருள் வேறாய் மறியும்மே
வழுவார் தமையுங் காண்டும• தாமாறுரையீரோ
புழுவாழ் கென்று புனன்மழை தந்த புகழுள்ளீர். 563

தெய்வத மென்று தேறினர் செய்யுஞ் சிறப்பென்றும்

கையது வீயக் காமுறு தானக் கலப்பென்று
மெய்தல் ரேயின் னிவையிவை யெல்லா மிழுக்காவோ
மெய்பிளந் திட்டு வேண்டுநர்க் கீயும் விழுமிய்யீர். 564

ஒள்ளிழை யாரே யுறுபொருள் பிச்சைக் குரியார்கள்
தள்ளின போழ்தின் னவையவை தன்னைத் தலைநிற்பார்
கள்ளர்க ளன்மை காட்டலு மாமோ கருணையாற்
பிள்ளைக ளேங்கப் பிறர்களுக் கீந்த பெருமைய்யீர். 565

நில்லா தாகக் கூறுத றன்னை நெறியென்றீர்
பல்வகை யானும் பாழ்செய்து பின்னே பரிகாரஞ்
சொல்லுவி ராயிற் சொல்லிய மெய்ம்மை துறவாமன்
கொல்சின வேழங் குறிநிலை செய்த குணத்தின்னீர். 566

ஓதி யாது முயிரில்லை யென்ப துரைத்து நின்றாயேற்
கோதி லங்கோர் குறியுயிரே கொள்ளி னுங்கோளழிவாம
வேதி லார்சொல் பரிகற்ப னையி னாலின் மைசொல்லி
னீதி யாநின் கருத்தினா லுண்மை யுந்நேர்ந் தாயன்றோ. 567

ஒன்று மில்லை யுயிரென்றுரைத்தநீ யுண்மை யின்மை
நின்ற வாறே நெறியாகநேர்கின் றாய்நீ யாவனோ
வன்றி முன்சொன் னவத்திறமெத்திறத்தா னும்மா காமையா
லின்றுந் நின்றுந் நீமொழிந்தாயெம்மிறை யேயிறை யாகவே. 568

போற லானு மதுபோ லாதென்றும்பு னைவினாலும்
வேறல் லதில் லையெனவும் வினைவலியும்யோ கின்னாலும்
தேறி நின்ற பொழுதோடிவ்வேழாந்திறத்தி னாலுங்
கூற லாமோ மீட்டுணர்வுகொண்டு ணர்வா னில்லாக்கால். 569

நாம சீவன் முதலாய நான்மை களின்முன் மூன்றிலுந்
தூய்மை சீவனுடைத்தாகு மன்றே னின்சொன் மாறுமாந்
தாம சீவன் முழுவது மென்று தருக்கு கின்றாய்
வாம சீவ னிவற்றினா லுண்மை மறுக்க லாகுமோ. 570

அறியும் மெய்ம்மை யும்மைங்கந்தம்மாட சிய்யு மல்லவையுஞ்
சிறிதும் மென்முன் னிலையின்மைகாட்டிச் சிதைத்தே னாலினிப்
பிறிதொன் றுண்டே லுரைய்யெனவுரைத்தாள் புத்தன் றான்பெரிதும்
மெறிபட் டென்னெ றியினாலேயடக்கு வன்னி னையுமென்றான். 571

ஆதி யலாத வகன்றடுமாற்றமுஞ்
சாதி யறுக்குந் தகையு மிவையென
வோதி வினைப்பயத் தொப்புரைப் பார்க்கன்றி
நீதி யிலாநெறி நேரல னென்றாள். 572

வித்தின் வழிவழித் தோன்றும் முளைகிளை
சத்தியி னாயசந் தானத்தை மாற்றென்பன்
வெத்தவ வித்தினின் வேறன்று வீடிது
தத்துவ மாக்கொ டளிரிய லாயே. 573

வினையு முளது பயனு முளது
தினையனைத் தாயினுஞ் செய்ஞ்ஞன மில்லை
யெனையவுங் கந்த மருகண நில்லா
நினையின்மற் றென்றா னெறிபயந் தானே. 574

குணம்பொரு ளென்றி கொடைபொரு ளென்றி
யுணர்ந்துசெய் துண்பா னொருவனி லென்றி
கணந்தனி லேநிலை கந்தமு மாயக்காற்
பிணங்குவ தொக்குநின் பேரெமக் கென்றாள். 575

தீதுள்ள மேலது தீயழப் பேசெய்யும்
யாதுள்ள மாண்புள மேலின்ப மாமென்னை
மாதுளம் பீசமுண் மாணரக் கின்னிறம்
போதுள்ளங் காண்பது போலமற் றென்றான். 576

எட்டி னியன்ற விரண்டினு ளாங்கவை
யட்ட வரத்தமு மல்லது மாய்ப்பய
மாட்டார் மலர்க்கண்ணுஞ் செம்மையு மற்றுமா
விட்டமுங் காடம்டுவ னீங்கிது போல. 577

ஐந்தி னியன்றவர் பிண்டத்த ராகிய
மைந்த ரிருவர் குசலா குசலத்தர்
சிந்தையி னல்லவன் றன்வழித் தேவனும்
வெந்தொழி லான்வழி வீறி னரகனும். 578

பீச மெனப்பட்ட தெட்டே பிறிதங் கொன்
றாசொன்று மில்லைய வைந்திற்கு மன்னது

நீ சொன்ன வாறிது நேருந் திறமென்னை
யேசுவன் கேள்யா னெடுத்தினி யென்றாள். 579

அயலரக் கட்டக பீசமுண் டாங்கு
வியலகத் தைந்திற்கும் வேறொன்று காட்டாய்
குயலமு மல்லது மாயினன் றாகும்
மயல்படைத் தாயொழி மாதுளங் காட்டல். 580

பூவின்கட் காட்டல் பொருந்தா ததன்வழி
மாவின்க ணாக மகன்செய் வினைப்பயன்
தேவன்கட் போலத் திருந்திய மாதுளஞ்
சாவின்கட் செய்கையுஞ் சாங்களைந் தாயோ. 581

வித்தொடு பூவின்கண் வேற்றுமை காட்டினும்
துத்தல் குழவி கிழவன்கட் சொல்லென்பன்
பித்துடை யார்போற் பிதற்றி வினைப்பய
மெத்திறத் தின்னு மியைத் துரைக் கில்லாய. 582

அங்குரந் தன்கண்ணுஞ் செல்லா தரக்கொடு
மங்கின பீசத் துருவ மலரின்கட்
டங்கின வென்னுஞ்சொற் றத்துவ மாக்கொண்ட
வங்குலி மாரனை யாதன்மற் றென்னாய். 583

அப்படி யாலரக் காமது போன்மெனிற்
றப்படை யானுழப் பெய்வழித் தங்குத
றுப்புடை யான்சுர னாகிய வன்றுய்க்க
லிப்படி யாயினீ யென்றுரை யாயோ. 584

எம்மை யுவப்ப வினைவழித் துப்பெனின்
¦ச்மை வழியது தீஞ்சுவை யென்றில்லை
யெம்மை வினைவினை யாக்குநின் பூவுரை
யிம்மையோ டும்மை யிவையிலை யாலோ. 585

உண்டது போலு முறுபயன் பன்மலர்
கண்டது காரண மாகக் கருதினு
மண்டையா மான்றசை மீன்றடி தோன்றிய
வண்டுண வாகலு மாமத னாலே. 586

தீயுழப் பேசெயுந் தீவினை யென்பது
வாயுழப் பாம்வழி யேபுகுந் தாயினி
நோயுழப் பாகிய நுஞ்செய்கை யாவையும்
நீயுழப் பாய்பிறர்க் கேயுழந் தாயால். 587

உள்ளம் வினையென வோதினை யேற்செய்கை
யெள்ளின் றுணையும• தின்மை யினைந்தெனக்
கொள்ளுந் திறமென்னை கூறாய் குணந்தினிக்
கள்ளமல் லாலென்றுங் கட்டுரை யாயால். 588

நின்னுடை யுள்ளமுஞ் செய்கையு மொன்றெனிற்
றன்னிடை யெய்துந் தரும தருமிமற்
றென்னிடைக் கொண்டிலை யெங்குப்பெற் றாயிது
முன்னுடம் பாட்டின் முரணுள தாமால். 589

சித்தமுஞ் செய்கையும் வேறென்றி யேயெனி
லொத்த வினையுடன் பாடின்றி யாமினித்
துத்த லையாதின் வழித்தெனச் சொல்லுதி
யொத்திய வல்ல துரையலை யாயால். 590

கண்டுணர்ந் தார்வத்தி னாற்செய்கை யாதலை
யுண்டெனி னாற்குண மொன்றினுக் கொட்டினை
பிண்டிநீ ழலவன் பேரறஞ் செர்தலிற்
கொண்டநின் கோளின்கட் குற்றமுண் டாமோ. 591

விளைவத னால்வினை யாக்குமென் பார்சொ
லுளைவதிங் கென்செய வோவுணர் வில்லாய்
தளைபெய்து வைத்தென்னைத் தம்பொறி யெல்லா
மளைவது நன்றிது தானற மாமேல். 592

ஆர்வத்தி னால்வினை யாக்கு மெனச்சொல்லி
னார்வத்தைச் சித்தமென் றாருரைப் பாரினிச்
சேர்வித்த துப்பினிற் செய்கையு மாதலை
நேர்வித்த வாறது நீயறி யாயால். 593

உணர்வினை ஆர்வ மெனவுரைப் பாயேற்
புணரும் பிறர்கடம் பொற்றொடி யார்மே
லுணர்வன்ற தார்வ முழப்பெனச் சொல்லி

னிணர்பிரி யாத்துப்பி னால்வினை யன்றாய். 594

சித்திமுடைச் செய்கை செய்வினை யாதலின்
சித்த முடைத்துப்புஞ் செய்வினை யாம்பிற
சித்தம் வினையெனச் செப்புத லாலெங்குச்
சித்தமுண் டவ்வழிச் செய்கையு முண்டே. 595

செய்கையி னாற்றுப்பு மாக்கியத் துப்பினிற்
செய்கையு மாம்வகை செப்புவித் தேனினிப்
பொய்கைசெய் தேசொன்ன பூவொடு வித்துரை
வைகவென் றாண்மல ருண்கண் மடவாள். 596

இருவகைப் பீசத் தியல்வு மழித்துத்
திருவகைத் தேவொடு பூவுஞ் சிதைத்தே
மருவுகை யாய்நின் மதுரஞ்செய் மாவும்
தருவனை யாயிற் றகரு மதுபோல். 597

வலிசெய்து பீசத்தின் மாண்பு மழித்திட்
டலிசெய்து விட்டே னமையு மதன்மேற்
பலிசையி னீசொல்லும் பாடங்க ளெல்லாம்
நலிவனொன் றொன்றா நடுவுணர்ந் தென்றாள். 598

பிறந்தவப் பிண்டம் வினையினோ டாங்கே
யிறந்தன வெத்திறத் தின்னுமற் றென்றாற்
சிறந்தவத் தேவெய்திச் சேர்தலுஞ் சீரா
தறஞ்செய் தறானு மவம்பிற வன்றே. 599

உரந்தனை யாது மொடுக்ககி லாகிச்
சுரந்தபல் குற்றஞ் சொலக்கேட் டிருந்தான்
பரந்தினி நீசொன்ன பல்வழி யெல்லாங்
கரந்தனை போதலைக் காட்டுவன் கேணீ. 600

அரக்கொடு பீச மறக்கெட்ட வாற்றல்
கரப்பது போலிடைக் காண்பரி தாகி
மரத்திடை சென்று மலரின்கட் டோன்றிப்
பரக்குமென் றேன்பயம் பைந்தொடி யென்றான். 601

அன்னணஞ் செய்தா னறங்கெட் டவன்வழித்

துன்னுஞ் சந்தானத் தொடர்ச்சி நிகழ்ச்சியிற்
பின்னை யதுபெறு மாதலின் யான்கண்ட
நன்னெறி நின்னா லறிவரி தென்றான். 602

கந்தங்க ளெல்லாங் கடையறக் கெட்டக்க
ணந்தமி லாக்குற்ற மாமெனச் சொல்லுஞ்
சந்தங்க டம்முட் சவலைச் சந்தானமும்
வந்த• தெவன் செய்யும் வாமமாற் றென்றாள். 603

ஆற்ற மகன்கெட்ட போழ்தே யமரிற்
றோற்றமு மென்னை துடித விமானத்து
ளேற்ற தவத்தவன் றேவென லென்கொல்
சாற்றுஞ்சந் தானத்தைச் சந்தித்துக் காட்டாய். 604

மக்க ளுடம்பொடு தேவ ருடம்பிடை
மிக்க விடம்பெரு வெள்ளிடை யாலிது
புக்க தொடர்வில்லை யாதலி னீகொண்ட
பக்க முடன்கெடு மாலென்னை பாவம். 605

புளிபொறி வாழ்நிழ றண்மதி யின்ன
தெளிவுள தாஞ்செல வின்முடி வென்னில்
விளிபவ னுளபொழு தேவினை துய்க்கு
மொளிகிளர் தேவ னுளமென்னு மாறோ. 606

சென்றில தேலிடை யற்றுழிக் தோன்றுக
வென்றலு மிங்குள தோவது தானெனி
னொன்றல பல்பொரு டாமொளி யாதிய
நின்றல வோவுல கெங்கும் நிறைந்தே. 607

தண்மதி கெட்டதன் சாயை யுடன்பெற
லுண்மை யுண்டாயினி னொத்துரை யொட்டுவன்
கண்மதி யாததெங் காரிய மேயின்ன
வெண்மதி யாயை விலக்குநர் யாரோ. 608

மதியென்று மில்லெனி னில்லொளி தானும்
புதியதும் பாழது பொன்றிய போழ்தே
கதியினை நாட்டிய காட்டி யெமக்கிங்
கதுவென்னை சொல்லிய வாறுரை யாத்தா. 609

அடியொடு பூவி னிடையற வின்றி
நெடியதோர் கொம்பினை நீமறந் தாயோ
மடியிலார் செய்த மானுயர் தெய்வப்
படியிது வென்றிடை பாழ்செய்திட் டாயால். 610

தோற்ற மிடையற வில்லாத் தொடர்ச்சியைச்
சாற்றுதும் யாமுஞ்சந் தான மெனவென்னிற்
காற்றுஞ் சுடருங் கரகத்துட் டாரையு
மேற்றன வல்ல விரண்டுண்மை யாலே. 611

பித்தொடு கனவிடைப் பேயின் மயங்குநர்க்
கொத்த வுணர்வுண்மை யொட்டல தென்செய
தத்துவ மாயசந் தான முளதெனிற்
புத்தநின் சொற்கள் பொருளில வேயால். 612

மூத்தல் வகையு முதலத னைம்மையு
மாத்த கணந்தோ றலர்ந்த நிகழ்ச்சியுஞ்
சாத்திரத் தாலத் தவிரன்கட் டாழ்ச்சியும்
போத்தந்து காட்டுந் திறமென்னை புத்தா. 613

கப்பம் பலபல கண்ணிமை யானுக்குத்
துப்பு முரைத்தென்னை தோன்றிய வக்கணத்
தொக்க விளைவுரைப் பாய்பின் வழிவழிச்
செப்புதி யேற்செய்கை சென்றுசென் றுண்டே. 614

காரண மென்னினுஞ் சென்றின்மை யாலில்லை
ஏரண தேவ விழுதைமை சொல்லுதி
யூருணி நீர்நிறை வுண்டோ யுறுபுனல்
வாரண வாய்க்கால் வரவில்லை யாக்கால். 615

நில்லா தறக்கெடுந் தோன்றிற்றுந் தோற்றமு
மெல்லா வகையினு மில்லதற் கேலில்லை
சொல்லாய் தொடர்ச்சி தொடர்ச்சியென் றேநின்று
பல்லார் களையும் படுத்துண்ணும் பண்பா. 616

சுடருடைத் தோற்றத் தொடர்ச்சியைச் சொல்லி
யிடருடைத் தாக விவையிவை காட்டி

யடர்படுத் திட்டாட் கதற்கொன்று நாடிச்
சடருடை வாசனை சாதிக்க லுற்றான். 617

கெட்டபி னாற்றல்க ளெல்லாம் வழியதற்
கொட்டு நறுமலர் வாசமோ டோட்டின்கட்
சுட்டுவ தொப்ப வெனச்சொல்லு நீகண்ட
விட்ட மிவற்றோ டியையல தென்றாள். 618

முன்னைய துள்ள பொழுதத்து மற்றதன்
பின்னைய தில்லை யதுபெற்ற போழ்து
தன்னையு மில்லை யெனச்சொல்லின் வாசனை
யென்னை யியையுந் திறமிவை தானே. 619

ஓடு மலரு மொருங்குள வாதலிற்
கூடும் வாசமுங் குற்றமொன் றில்லெனிற்
கேடும் பிறப்பு முடனில்லை யாதலிற்
கூடல வென்பது கூறின மன்றே. 620

கெடுவத னுண்ணின்று தோன்றுவ தன்கண்
வடுவறச் செல்வது வாசனை யென்னப்
படுவதொன் றன்றுநின் பக்கத்தை யெல்லாஞ்
சுடுவதோர் கொள்ளி சுவடித்த வாறே. 621

போதின்க ணின்றும்புத் தோட்டிற் பொருந்திய
தாதின நாற்றந்தண் ணீருக்குச் சொல்லுதி
யோதன கந்த முடன்கெடின் வாசனை
யாதின தாகு மறிந்துரை யேழாய். 622

வாசனை வாசனை யென்று வழிவழி
நீசொன்ன நீசொன்ன நேர்வதிங் கென்செய்ய
பாசன மாகிய பாதிரிப் பூவினைப்
பூசின தெப்பொருள் போத்தந்து காட்டாய். 623

பூவின்கட் கேடும்புத் தோட்டின்கட் டோன்றியு
மேவிய வாசனை யெங்குமுண் டாமெனின்
சோபன மாகச் சுவாகதம் போந்ததென்
றேவன் றிருந்தடி சிந்திமற் றென்றாள். 624

அதற்கு மறக்கே டுளதெனின் வாச
மதற்குமுண் டாயினி யெல்லையின் றோடு
மிதற்கெண்ணு மில்லெனி னில்லை யதற்கு
முதற்சொன்ன குற்றம் முடிந்தன வாமே. 625

சென்றதென் றாலதன் கேடின்மை யாஞ்செல
வின்றதென் றாலத னாற்றமு மில்லற்க
நன்றிதென் றேசொல்ல நல்லது நாமறிந்
தன்றிதென் றென்முனே யாருரைக் கிற்பார். 626

கேடது தான்முழு தாதலி னீசொல்லும்
வீடது வாகலும் வேண்டும் விழுத்தவம்
கூடு பவர்க்குங் குணமில் லவர்க்கு
நீடல தேயுள தாநிரு வாணம். 627

தோற்றம் வழியென்று சொல்லுத லாற்றட
மாற்ற மதுவிதன் மார்க்கத்து மாண்பெனச்
சாற்றுதி யேலுந் சவறது வாதலைத்
தேற்றுவன் கேணீ தெருண்டிருந் தென்றாள் 628

தன்வழித் தோற்றிக் கெடுமோ வதுகெடப்
பின்வழித் தோற்றம் பெறுமோ விரண்டனு
ளென்வழித் தோற்றம• தாமா றிருளற
நின்வழித் தோற்றத்தை நீயுரை யென்றாள். 629

வழியொன்று தோற்றிக் கெடுமேன் மகப்பெற்
றழிகின் றவள்போ லணைவுள தாகு
மொழிகின்ற தேயது காணல தென்னிற்
கழிகின்ற கன்னிக்கோர் காதலற் காட்டாய். 630

பிறப்பித்துக் கேடும்பின் றோற்றக் கெடலும்
இறப்பவுங் கூடா திருதிறத் தானுந்
துறப்பித்த வாறிது தூவெனக் கேட்டை
மறப்பித் துரைத்ததுண் டோசொல்லு வாம. 631

சுலாப்பல சொல்லிச் சுழன்று விடாதே
துலாத்தலைத் தூக்கமு மோக்கமுங் காட்டி
னிலாத்தலை யல்லா விரண்டு ளொன்றுண்டா

யிலாத்தலை யில்லே லமைவது மன்றே. 632

இல்லதற் கோயில்லை கேடென்னை காக்கையின்
பல்லதற் கோதார் பருமையு நுண்மையுஞ்
சொல்லிதற் காவதுண் டேலெனச் சொல்லின
ணல்லதற் கல்லது நாப்பெய ராதாள். 633

துலாமில்லை யட்டக மேயது தானு
மிலாமிரு பாற்றலை யேதலை தாமு
நிலாம்வகை யில்லுயர் வோடிழி வெங்கும்
கலாமவை யாய்க்கடை கண்டது பாழே. 634

ஓல குளவி குருட்டெண் ணெய் வாணிச்சி
கோலஞ் சிதையுமென் றெண்ணெயட் டாளென்னும்
பாலகர் பாட்டுரை போன்றது மற்றுநின்
நூலுரை யெல்லா நுழைந்துணர் வார்க்கே. 635

கோற்றிர ளொன்றா யதன்றலைக் கேயுட
னாற்றியு மோக்கமு நாட்டினை ய•தொப்பத்
தோற்றமுங் கேடுந் தொகுபிண்ட மொன்றிற்குச்
சாற்றுதி யாய்விடிற் றக்கதென் னேனோ. 636

தலையன தாழ்ச்சியு மெழுச்சியு மன்றி
நிலையிலை கோலிடை நீக்கலு நீங்கு
மிலையென வெட்டி னிடுகுறி யொன்றெனிற்
பலவினி யிங்குப் படுவன கேணீ. 637

கோலுந் தலையு முடனில்லை யாமெனின்
மேலு முரைத்தன மேயதன் மேற்பழி
வாலுந் தலையு நடுவு மவையின்றிப்
பாலும் படுவதோ ராவுள தென்னாய். 638

புணரிய தாமவை பொய்யெனச் சொன்னேற்
குணர்வதங் குண்மையு மொட்டுவை யாயிற்
குணகுணி யாயு மவயவி யாயும்
பிணபிணக் கெய்துமப் போ¢டர் செய்தாய். 639

இருபிண்ட முப்பிண்ட மெண்ணில்பல் பிண்டம்

வருபிண்ட மேற்பல மற்றவை நீங்க
வொருபிண்டங் கொண்டாங் குயிர்க்குறுதி யிட்டுத்
திருவுண்ட செய்கையிற் செய்தவ னாக. 640

வினைசெய்தான் றுய்க்குமோ வேறொருவ னேயோ
வனைவரு மோவில்லை யோசொல்லா யோவென்னக்
கனைகடலி னுண்மணலிற் கண்ணினையு மீந்தா
னினைவகைய கேளென் றெடுத்துரைக்க லுற்றான். 641

அவனேயு மென்னேன் பிறனேயு மென்னே
னவனும் பிறனு மவரேயு மென்னே
னெவனேயு மெய்தா னெனலேயு மாகா
வெவனோ விதுதுய்ப்பா னின்னணங்கே ளென்றான். 642

அதுவேயு மென்னேன் பிறிதேயு மென்னேன்
அதுவும் பிறிது மவையேயு மென்னேன்
அதுபோன்ற வல்ல ததன்வழியின் மற்றொன்
றிதுபோல வென்பே னெடுத்துரையுங் கேணீ. 643

இடுபீச மன்றா லிறுங்காதி யன்றால்
வடுவாய வவ்விரண்டும் வந்தனவு மன்றால்
நெடிதாய தீங்கரும்பு நெல்லுமே போல
நடுவாக நோக்காய் நறுநுதலா யென்ன. 644

ஆத்தாவ தன்றேற் பிறிதா மரும்பெற
னாத்தான் வருத்த நீ நாட்டியதியாங் காணேன்
போத்தாகா தேற்குதிரை பெட்டையது போலென்
சாத்தாகு மாகாமை சாதிக்க வல்லையோ. 645

அவன்போற லானு மவனன்மை யானு
மவன்றன் வழியா னவனாத லானு
மவன்றான் பிறனே யவனென்ற லானு
மவன்றான் பிறனே யெனவழிவ துண்டோ. 646

கண்போலக் கயலெனினுங்
காடன்றித் தூறெனினும்
பெண்பாலாற் பல்கியும்
எல்லாம் பிறவேயாம். 647

அயலானே துய்க்கு மவன்றுவ்வா னென்பாய்
முயலானு மில்லான் முகஞ்சிறிதே யொப்பான்
வயலாமை போல்வதோர் மக்குளி யிலானென்
றியலா தனவே யெடுத்துரைத்தி யென்றாள். 648

அயற்பிறனு மல்ல னவன்றானு மல்லன்
புயற்றிறலைங் கூந்த லிதன்போலப் பிறனுக்கேல்
முயற்பிறவி மேயினீர் முன்செய்தா னங்கோர்
பயப்பெறுவ தில்லையேற் பாழ்பயனி தென்னோ. 649

தற்பிறிதே யாகிப் பிறபிறிது தானல்லா
நெற்பிறிது போன்மெனவு நீயுரைத்தா ய•தொழிந்து
சொற்பிறிது சொன்னாய் சுவர்க்கத் தவர்க்குரைப்
பிற்பிறனே யாகிப் பெறப்பிறனே யாகானோ. 650

நெல்லின் வழிக்கரும்பு நீள்கரும்பி னானெல்லுஞ்
சொல்லுநீ சொல்லாயேற் சொல்லியநின் சொல்லெய்தா
வல்லனாய்ச் செய்த மகன்வழியி னான்மகன்றா
னல்லனாய்ச் சொல்லின் னுலங்கரு வாமே. 651

செய்தானுஞ் செய்தானே துப்பானுந் துப்பானே
யி•தாலென் மெய்ம்மை கிடந்தவா றென்றானுக்
கெய்தார் பிறவோ விருசார் வினைப்பயனுஞ்
செய்தார்க டாமெனலுஞ் சிந்தித் திருந்தானால் 652

கண்ணுந் தலையும் பிறவுங் கருந்தடியும்
பெண்ணுங் கொடுத்துப் பிறர்க்கே யுழந்தாய்முன்
னெண்ணுங்கா லின்னுநீ யெவ்வினையுஞ் செய்தாரை
யுண்ணுந் திறமொன்று மோதா தொழிந்தாயோ. 653

எனைத்துணையு நீவருந்தி யெத்துணையோர் கால
நினைத்திருப்பி னல்லது நின்காட்சி தன்னால்
வினைப்பயத்தின் கூட்டம் விரித்துரைப்ப னென்னிற்
றினைத்துணையு மாகாமை தோ¢துநீ யென்றாள். 654

முழுக்கேடு வேண்ட¡யேன் முன்ன¢ன்ற துண்ட¡ம்

வழுக்குமே லவ்வுரைக்கு மாறுகோ ளஂ•த ¡
மிழுக்காமை புத்தE ரெனைப்பலருங் கூடிக்
குழுக்கள¡ய் வந்துநுங் கோளஂறுமி னென்றாள். 655

நின்றே நிலையுமெனஂ னஂத்தஂயமே யாயொழியு
மன்றேய• த¡யி லநித்தஂயமா மவ்விரண்டு
மென்றே யுரைக்கிலஂரு வழிக் குற்றமுமா
மென்றே யுரைக்கின்றா யேகாந்த ன¡குதஂயோ. 656

உச்சேதந் த¡னு மொருவகையா லவ்வகையே
யச்சேத மின்மையு மவ்விரண்டு மாய்நிகழ்ந்து
பொய்ச்சேத மல்ல¡ப் பொருண் முடிபொன் றுண்ட¡க
மெச்சாயே நீயெனயான் மெச்சுவனே யென்றான . 657

இறைவன்ற னூலுணரி னெவ்வுருவி ன¡ரு
முறையின¡ லெய்துவர்த¡ முன்னஂய வீடென்றாள்
மறையின¡ ல¡யினு மற்றொருவா றேனு
நிறையின¡ற் செல்லென்று நோழையுஞ் சென்றாள். 658

----------

## 7. ஆசீவக வாதம் (659 – 729)

கண்ணார் சிறப்பிற் கபில புரங்கடந்து
விண்ணாறு செல்வாள் வியன்மலைபோற் றோற்றத்தாள்
உண்ணால் வினையு மொருவி யொளிர்மேனி
யெண்ணா துணர்ந்தானை யேத்தத் தொடங்கினாள். 659

அங்கம் பயந்தா னறைந்த சுதக்கடலுள்
பங்கங்கள் சாராப் பரசமையர் சொல்லுளவோ
பங்கங்கள் சாராப் பரசமையர் சொல்லேபோற்
புங்கவன்றன் சேவடியைச் சேராத பூவுளவோ. 660

பூர்ப்பம் பயந்தான் புகன்ற சுதக்கடலுள்
சார்த்திப் பிறவாத் தவநெறிக டாமுளவோ
சார்த்திப் பிறவாத் தவநெறிக டம்மேபோற்
றீர்த்தன் றிருநாமங் கொள்ளாத தேவுளவோ. 661

புலவ னுரைத்த புறக்கேள்வி சாரா
துலக நவின்றுரைக்கு மோத்தெங் குளதோ
வுலக நவின்றுரைக்கு மோத்தேயு மன்றிப்
பலவும் பகர்வாப் பயந்தனவே யன்றோ. 662

அலரோடு சாந்த மணிந்தெம் மிறைவர்
மலரடியை யல்லதியா மற்றறிவ தில்லை
மற்றறிவ தில்லாத வெம்மை மலரடிகண்
முற்றவே செய்து முடிவிற்க மன்றே. 663

புனையுலகிற் காதிய புங்கவ னார்த
மிணையடியை யல்லதியா மின்புறுவ தில்லை
இன்புறுவ தில்லாத வெம்மை யிணையடிக
டுன்புறவி லக்கதியுட் டோற்றுவிக்கு மன்றே. 664

இரவிடைநன் மணிபோலு மண்ணா துணர்ந்தான்
திருவடியே யல்லதென் சிந்தனையி லில்லைச்
சிந்தனையொன் றில்லாத வெம்மைத் திருவடிக
ளந்திணையில் பேராற்ற லாக்குவிக்கு மன்றே. 665

தொக்குட னாயவென் றொல்வினை தீர்கென
முக்குடை யானடி மூன்றினும் வந்தித்துக்
குக்குட மாநகர் நின்று கொடிமினிற்
றக்கதிற் றான்போய்ச் சமதண்டம் புக்காள். 666

ஈண்டி யிருந்த விலிங்கியர் தங்கட்கு
மாண்ட துகிலல்குல் மாதரிது சொல்லும்
காண்டற் கினிதே கடிமலர்ப் பூம்பள்ளி
யீண்டுறை வாரிவர் யாவர்கொ லென்றாள். 667

காரணம் வேண்டாக் கடவுட் குழாந்தன்னிற்
பேருணர் வெய்திப் பெரிதும் பெரியவன்
பூரண னென்பான் பொருவறக் கற்றவ
னாரணங் கன்னாட் கறிய வுரைக்கும். 668

புயலிருங் கூந்தற் பொலங்கொடி யன்னா
யயலியர் தாமல்ல வாசீ வகர்கள்

வியலிடத் தியாரும் வியக்குந் தகையார்
மயலறு காட்சியிம் மாதவ ரென்றான். 669

ஆத்தனு நூலும் பொருளு நிகழ்ச்சியும்
பாத்தன சொல்லப் பயம்பெரி தாகலி
னோத்துரை யேயிங் குரையென் றுரைத்தனள்
சாத்திரம் யாவையுந் தன்னிக ரில்லாள். 670

என்றலு மற்கலி தானே யிறையினி
ஒன்பது வாங்கதிர் நூல்யா முடையன
மன்பெறு நுண்பொரு ளைந்தியல் பாயவை
யென்ப நிகழ்ச்சியுங் காழ்ப்பா டெனச்சொல. 671

அறிந்தா னிறைவ னவனா குதலாற்
செறிந்தான் பெரிதுஞ் செறியா துரைப்பி
னெறிந்தா னனைய வியல்பா குதலான்
மறிந்தான் றடுமாற் றகத்தே மயங்கி. 672

உரையா னிறைவ னுணலு மிலனாய்த்
திரையா னரையான் றெரிவில் லுருவம்
வரையா வகைவா னிடுவில் லனையன்
புரையா வறிவிற் புகழ்பூ ரணனே. 673

அடங்கல் குறிக்கோண் முதலா யினவாய்க்
கிடந்த கதிருட் கிளந்த பொருளுந்
தொடங்கி யுரையாந் தொகையா குவதே
யுடங்கே யுணுவைந் துருவா யுளவே. 674

நிலநீ ரெரிகாற் றுயிரி னியல்பும்
பலநீ ரவற்றின் படுபா லவைதாம்
புலமா கொலியொன் றொழிய முதற்காஞ்
சலமா யதுதண் மையையே முதலாம். 675

எறித்தன் முதலா யினதீ யினவாம்
செறித்த லிரையோ டிவைகாற் றினவா
மறித்தல் லறிதல் லவைதா முயிராம்
குறித்த பொருளின் குணமா லிவையே. 676

அணுமே யினவைந் தவைதா மனைத்துங்
குணமே யிலவாங் குழுவும் பிரியு
முணன்மே யினுமுள் புகுதல் லுரையேங்
கணமே யெனினும் மொருகா லமிலை. 677

இவையே பொருள்கள் இவற்றி னியல்பும்
சவையே அறியச் சிலசாற் றுவன்கேள்
சுவையே யுடையம் மெனநீ யிகழல்
லவையே பிறராலழிதற் கரிய. 678

அண்ணலு நூலும் பொருளுநிகழ்வு மிவையெனலு
மெண்ணினு மேனை யெழுத்தினுமிக்காங் கிருந்தவர்முன்
கண்ணினு மன்றிக் கருத்தினும்வேறெனக் காட்டலுற்றுப்
பண்ணலங் கொண்டசொல் லாளவைபேர்த்தும் பகர்ந்தனளாய். 679

முற்ற வறிந்துரை யாதவன் மோனாந் திருந்தனனேற்
செற்றம் பெரிது முடையனச் சீவன்க டம்மொடெல்லா
மற்ற முடையவர் சொல்லின வாகம மன்மையினாற்
பெற்ற வகையென்னை பேதாயதனைப் பெயர்த்தெனவே. 680

ஒக்கலி யோகலி யென்றிரு தெய்வ முரைத்தனவேன்
மற்கலி யார்போ லறிந்தன வாயிற் செறிந்தனவாம்
தக்கில வேயறி யாதன சொல்லுத றத்துவத்தை
யிக்கலி யாள ருரைத்தவு மேதமெ னாய்பிறவோ. 681

அறிந்தா னறிந்தன தான்சொல்லினார்வச் சினத்தனனா
யெறிந்தா னனையதோ ரேதத்தையெய்துமவ் வேதத்தினான்
மறிந்தா னகன்றடு மாற்றத்தகத்தெனின் மாண்புணர்ந்தாய்
செறிந்தாங் கிருக்கிற்பி னீயுஞ்சிற்றாத்தனை யாகிற்றியே 682

ஆத்த னறிந்தன யாவையுஞ்சொல்லல னாய்விடினிச்
சாத்தனும் யானு மவன்றன்னிற்சால விசையுடைய
நாத்தனை யாட்டியோர் நன்மைகண்டாலு நினக்குரைத்து
மீத்தன முண்டு மிருமைக்குமேத மிலம்பிறவோ. 683

வானிடு வில்லின் வரவறி யாத வகையனென்பாய்
தானுடம் போடு பொறியின னாதலிற் சாதகனா
மீனடைந் தோடும் விடுசுட ரான்கதிர் வீழ்புயன்மேற்

றானடைந் தாற்றனு வாமிது வாமதன் றத்துவமே. 684

முற்ற வறிந்தனன் யானென்றுமோனங்கொண் டேயிருந்தா
னற்ற மகலவென் றானீயறிந்தமை யாதினினாம்
பெற்ற வகையெனப் பேச்சின்மையாலெனிற் பிள்ளைகளும்
மற்றிம் மரமு மலையுமம்மாண்பின வாம்பிறவோ. 685

முடக்கு மெனினு நிமிர்க்குமெனினுந்தன் மூக்குயிர்த்து
நடக்கு மெனினு மிருக்குமெனினுந்த னல்லுறுப்பி
னடக்கு மியல்பல்ல னன்னவற்றார்வத்த னாகுமன்றி
யுடக்கு மிவையில்லை யேலுயிர்தானுண்மை யொட்டுவனோ. 686

நிலப்பாலு நீர்ப்பாலுந் தீப்பாலும் காற்றின்
புலப்பாலு நெட்டுயிரின் போக்கில்லாப் பாலும்
சொலற்பால வல்லாத சொல்லுதலால் யானு
மலப்பா தொழியேனிவ் வாசீ வகனை
யருகிருந்தார் தாமறிய வாசீ வகனை. 687

வண்ணாதி யெல்லாம் வகுப்பின் னிலப்பாலாம்
நண்ணாத மூன்றிற்கு நன்பால் பிறவாகிக்
கண்ணாதி யாலவற்றைக் காணப்பா டில்லையா
யெண்ணாதே யிந்தியக்கோ ளெய்தாமை வேண்டும்
எனைத்தும் பெறப்பாடு மில்லாத வேண்டும். 688

நீர்ப்பாலுந் தீப்பாலு நில்லா வளிப்பாலும்
பேர்ப்பாலே பற்றிப் பிறப்பிறவா நீபெருக்கி
யோர்ப்பி யாதுஞ்செய்யா துரைத்தா யுரைத்தமையிற்
கூர்ப்பியாது மின்றிநின் கோளழியு மன்றே
கொணர்ந்துநீ யைந்தென்ற கோளழியு மன்றே. 689

பொருடாமி வைந்தொழியப் போத்தந் துரைப்பா
யிருடாமி வைந்தனு ளெக்கூற்ற தாமோ
விருடாமி வைந்தனுளு மெக்கூற்று மில்லை
லருடாழ்ந்து நீயிருப்ப தியாதின்பா லாமோ
அணுமயமாங் கந்தங்க டாமனந்த மன்றோ. 690

பலவாக நீசொன்ன பாலெல்லாந் தம்முட்
கலவாவா யப்பொருளே யாதலையுங் கண்டா
லுலவாதோ வொற்றுமையும் வேற்றுமையு மென்றாற்

சலவாதி யொன்றுஞ் சமழலையே கண்டாய்
சமத்திடை யொன்றுஞ் சமழலையே கண்டாய். 691

பாறாம் பலவாகிப் பாலாகு மப்பொருளே
வேறாது மில்லை யெனவே விளம்புவாய்
நீறாக நின்ற நிலப்பால் பெறவேலா
நாறா வகையெனக்கு நன்குரைக்கல் வேண்டும்
நலிந்தாற் பிறபொருட்கு நாட்டலே வேண்டும். 692

இன்றேய தாயி னிவைபா லிவைபொருள்க
ளென்றே பலவா வெடுத்துரைப்ப தென்செய்யக்
குன்றோ மலையோ குவடோ வடுக்கலோ
வன்றோவ தன்றால• தியாப்பாதல் வேண்டும்
அவையவையே சொன்னால• தியாப்பாதல் வேண்டும். 693

நோயில்லை வாழி கடவு ளெனவுரைத்தா
னாயினோ யின்மையினேர்ந் தாய வழியொருநாட்
டீயினும் வெய்யநோய் சேர்தலையுங் காண்டுநீ
சாயினும் தத்துவத்தைச் சாராதா யன்றோ
தடுமாற்றக் காழ்ப்பாடந் தாமுளவே யன்றோ. 694

கடுங்கதிரோன் மீதூரக் காணாக்கோ ளெல்லாம்
படும்பொழுது மெழுச்சியினுந் தம்பயனே செய்யு
நெடுங்காலம் பல்பிறவி நின்றன வெல்லா
மொடுங்காதே மேய்ந்துண் டுழிதரலே வேண்டும்
உதவாத வார்தலையு மொட்டலே வேண்டும். 695

எப்பாலுந் தான்கெடா வில்லனவுந் தோன்றாவென்
றொப்பியாது மில்ல துரைத்தளியின் றானுண்ணும்
துப்பாயதூச் சோற்றுத் தூய்தல்லா தாழ்ந்துளதென்
றிப்பாவி செய்யு மிழிதகவி தென்னோ
விழுதைதான் செய்யு மிழிதகவி தென்னோ. 696

நின்றீக கொண்டீக வுண்டீக தின்றீக
வென்றிவைகள் கூறி யிடுவார்க் கறம்வேண்டான்
கொன்றீகை தீதென்றுங் கொல்பாவ மில்லென்றுந்
தன்றீகை யுண்ணாதான் றான்கண்ட தென்னோ
தவத்தினு மில்வாழ்க்கை தான்கண்ட தென்னோ. 697

இல்லாத தோன்றா கெடாவுள் ளனவென்பாய்
சொல்லாயே நெய்சுடராய்ச் சுட்டிடுமா றென்றேனுக்
கல்லாந் தயிர்த்தோடி யாழ்மிதப்புச் சொல்லுதியா
லெல்லாமொன் றொன்றிற் கிடங்கொடா வன்றே
யிழிவுயர்ச்சிக் காரணமு மில்லாதா யன்றே. 698

ஓட்டுங் குதிரையு மொன்றே யெனிற்குதிரை
யூட்டம் பொழுதொடுதான் புல்லுண்ணும் போழ்தின்கா
னாட்டிய வீதி யதிசயத்தை நீயெமக்குக்
காட்டி யுரைப்பினின் காட்சியைக் கோடும்
கடவுட் குழாத்தார்தம் காழ்ப்பெலாங் கோடும். 699

வண்ண முதலா வுடைய குணமெல்லாம்
எண்ணுங்கா லப்பொருளே லீந்தி னிளங்காய்க்கட்
கண்ணினாற் கண்ட பசுமை கனிக்கண்ணுந்
திண்ணிதாக் காட்டிற் றெருண்டாயே யென்றும்
திரிந்தொழிந்த காட்டினாற் றேவனே யென்றும். 700

வட்ட முதலா வுடைய பொருளெல்லா
மொட்டிநீ யப்பொருளே யொன்றும்வே றில்லென்பாய்
தட்ட மழித்தோடஞ் செய்தா லதன்கண்ணும்
விட்ட வடிவு விரித்துநீ காட்டாய்
விகார மனைத்தும் விரித்துநீ காட்டாய். 701

மிதப்பனவு மாழ்வனவும் வேண்டுவனயா னென்னிற்
பதப்பொரு டானான்கின் பன்மைமுடித் தாயா
மிதப்பனவே யாழ்வனதாம் வேறியாது மில்லே
லுதப்பேனு நின்சொ லுதவலவே கண்டா
லுடனேநின் பக்க முடைத்திட்டாய் கண்டாய். 702

தொழிற்சொற் குணச்சொல் வடிவுச்சொன் மூன்றும்
பிழைப்பில் பதமாப் பிரிவிடத்துக் காண்டு
மிழுக்கில் பொருளோ டியைத்தக்காற் சந்தி
யெழுத்தியலிற் கூட்டமு மெப்பொழுதுங் காண்டு
மிலக்கண நின்சொ லியையலவே கண்டாய். 703

அதுவா வதுவு மதுவாம் வகையு
மதுவாந் துணையு மதுவாம் பொழுதுஞ்

சதுவா நியதத் தனவா வுரைத்தல்
செதுவா குதலுஞ் சிலசொல் லுவன்யான். 704

அரிவை யவளாங் குழவி யவளை
யுரிய வகையா லுவந்தாங் கெடுத்தா
லரிய முழமூன் றளவாம் பொழுதும்
வரிசை யுரைத்த வருட மதன்பின். 705

குழவித் திறமுந் துறவா ளவளும்
முழுவித் ததுவும் முளையா துளதா
மிழவெத் துணையு மியல்பேன் முடியா
தழிவித் திடுவே னயநீ விரையல். 706

முலையும் மகவும் முறுவல் லவையும்
தலையுண் மயிரும் முகிரும் முடனே
நிலையில் லமையு மிலதா மெனினே
யலையுந் நினகோ ளுடனே யெனலும். 707

உளவே யெனின்முன் னுரைத்தந் தியதங்
களவே யெனலாங் கடையா மெனநீ
கிளவா தொழியாய் கிளந்த குழவிக்
களவே முழமா வவைதாம் பலவால். 708

உடையள் ளிவடன் னுதரத் தொருபெண்
ணடையு மவளுக் கவளவ் வகையாற்
கடையில் குழவி யவைதன் னியல்பா
நடையு மதுவே னகையாம் பிறவோ. 709

இனியாம் வகையு மிசைத்தி யெனினுந்
நனிகா ரணமாய் நடுக்கு நினகோட்
டனிகா ரியமும் முளதேற் றவறா
முனிலா மொருவன் பொழுதும் முடிவாம். 710

நியதந் நிகழ்ச்சிந் நியதா வுரைப்ப
தயதி யெனினீ யமையுஞ் சலமேல்
வியதி யெனினும் வெகுளல் இழுதை
பயதி யெனினு நினக்கோர் பயனே. 711

பாலைப் பழுத்தி னிறத்தன வாய்ப்பல மாட்டொடுகண்
ணாலெத் துணையு மகன்றைந்து நூறாம் புகையுயர்ந்து
ஞாலத் தியன்றன நல்லுயி ரென்பது நாட்டுகின்றாய்
மாலித் துணையுள வோநீ பெரிதும் மயங்கினையோ. 712

ஒன்றினு ளொன்று புகலிலவென்ற வுயிர்களெல்லா
நின்றன தந்த மகலமுநீளமும் பெற்றனவாய்
நன்றுநீ சொல்லுதி நாந்தொக்கிருந்துழி நல்லுயிர்க
டுன்றின வென்பது சொல்லாதினியென்ன சொல்லுதியோ. 713

தானுள தாய வழியதன் றன்பா லியல்பெனலா
மூனுள தாய வுயிர்ப்பிர தேச முணர்வதுபோல்
வானுளம் போயுழி மன்னு மறிவிலை யேலதனை
நானுள தென்றுரை யேனதற் கியாரினி நாட்டுகிற்பார். 714

ஒன்றென நின்ற உயிர்தானுருவின தாதலினாற்
பொன்றுந் துணையும்பல் போழெய்தும்பூசணிக் காயினைப்போ
லின்றெனி னாகம மாறதுவாமினி யவ்விரண்டு
மின்றெனிற் சால வெளிதாம்பிறவத னின்மையுமே. 715

எண்டனை யாக்கி யிடவகை யுட்பொரு ளீறுசொல்லி
மண்டல மாக்கி மறுத்துங் கொணரு மனத்தினையேற்
கண்டிலை நீமெய்ம்மை காழ்ப்பட்டு நின்ற கனவுயிர்க்கெண்
ணுண்டெனி னில்லை யகன்றடுமாற்ற முலப்பின்மைபோல். 716

மேற்சீர தீயோ டுயிர்காற்று விலங்கு சீராம்
பாற்சீர நீரு நிலந்தானும் பணிந்த சீரா
மேற்சீர மேற்போம் விலங்கோடு விலங்கு சீர்கீ
ழாற்சீர வீழும் மவையென்னினு மாவ தென்னோ. 717

தீயு முயிருந் தமக்காய திசையி னாலே
போயு மொழியா திவணிற்றல் பொருத்த மன்றால்
வீயும் வகையும் வினையாக்கும் திறமு மெல்லாம்
நீயு மவற்றை நினைவாயுள வாக வன்றோ. 718

தென்றை யதுளையத் திசைதானுறப் போய காற்றேற்
பின்றை யொருநாட் பெயராததோர் பெற்றி ய•தான்
முன்றை தழுவி முனிவாக்கும் வடந்தை யத்தா

வின்றைப் பகலே யிதன்மெய்ம்மை யிசைக்கிற்றியோ. 719

முன்சென்று வீழுந் நிலநீரை முகிலு ணின்று
பின்சென்று பெய்யுந் துளிதானும் பெருந்த வத்தா
யென்சென்ற தெய்துந் திறந்தன் னையெனக் குணர
நின்சென்ற வாற்றா லுரைத்தானெறி யாற்ற நன்றே. 720

பாலெங்கு மோதப் படுகின்ற பதப்பொ ருட்குக்
காலங்கள் சொல்லா யதுதானுன் கணக்கு மென்றாற்
சீலங்கள் காத்துக் குணனின்மையைச் செப்பு கின்றாய்
மாலிங் குடையை யதுதீர்க்கு மருந்து முண்டோ. 721

நோயுற்ற நுன்போற் குணமொன்றில னாய யானும்
பேய்மற் றிவடா னெனக்கண்டோர் பெரிய வன்றா
னீமற்றி துண்ணென் றறநல்க விளங்கப் பெற்றேன்
வாமத்து ணீயும் மதுபோலு மருந்தில் லையே. 722

நோயைத் துணிந்தே யுறுநோய்முத னாடியந்நோய்க்
காய மருந்தே யறிந்தூட்டும• துண்டு காட்டிற்
பாய மறுக்கும் படியாமது பல்லு யிர்க்கும்
கூயத்தி னென்னை குரவருப தேச மென்றாள். 723

சாதி முதலாப் பிணிதாமிவை யப்பி ணியிற்
காதி யறியில் லவைதீவினை யூண தனாற்
றீதின் றிதனில் லழுந்தல்திரி தோடத் தினால்
வேத னையது தீர்ப்பது மெய்யுணர் வாமே. 724

மானின்ற நோக்கின் மறவேனெடுங் கண்ணி னல்லாய்
மேனின்ற வெல்லா மிகநல்லவிம் மெய்யுணர்ச்சி
தானின்ற தன்மை தவிராதுரைக் கிற்றி யேனின்
னூனின்ற வாறே பொருணோக்குவன் யானு மென்றான். 725

நின்ற விரலுந் நிலையாழ்ந்து முடங்க லாயிற்
சென்றவ் விரலும் மெனத்தானின் கூற்ற தாயிற்
றொன்றவ் விரலே யுறலுண்மையு மின்மை யும்மா
மென்றவ் விரலே யிதுவென்றனள் வேற்க ணல்லாள். 726

ஆழ்ச்சி யொருபா லதுவல்லன தம்மோ டாழா

தேழ்ச்சி யொன்பா லதுதன்னொடு மின்ன தென்னச்
சூழ்ச்சி யமைந்த துணைத்தோளியர் சொற்க ளென்று
தாழ்ச்சி மனத்தா லிதுதத்துவ மென்ற னன்னா. 727

பொய்ந்நின்ற வெல்லாம் புரைத்தாயினிப் பூர ணன்னே
மெய்ந்நின்ற பெற்றி யறிந்தாயிதன் மேலு நன்றாக்
கைந்நின்று முண்டுங் கடைப்பள்ளி வழியு மாக்கிச்
செய்ந்நின்று நீசெய் தவந்தானெனச் செப்பி னளே. 728

கல்லா தறிந்த கடவுள்ளிறை யாகு மெய்ந்நூல்
சொல்லானு மல்ல னவன்சொல்லின தாகு மும்மூன்
றெல்லாப் பொருளுந் தம்பான்மை யியல்பு மேன்று
பொல்லாத போக்கி யினிப்பூரண சென்மி னென்றாள். 729

------------

## 8. சாங்கிய வாதம் (730 – 782)

ஆங்கவன் சொல்லவவ் வத்தின புரத்து
ளோங்க வொருகொடி நட்டுரைக் கிற்பவ
னாங்க ணெவர்க்கு மறையென் றிருந்தவச்
சாங்கியன் றன்னைத் தலைப்பெயச் சென்றாள். 730

சென்றா ளவன்றன் சிரத்தையைக் கண்டோத
நின்றா ளவன்றா னெறிபகர் கின்றனன்
பின்றான் பிரளையத் தாக்கமும் பேர்ச்சியு
மொன்றா வகையா லுரைகளை யொட்டா 731

பாலொத்து நின்ற பரமாத் துமனொடு
மூலப் பகுதியு மல்லாப் பகுதியு
மேலொத் தியன்ற விதிவிகற் போடு
நூலிற் கிடந்தவ நுண்பொரு ளன்றே. 732

ஒருங்கிருந் தார்கட் குடனவை யெல்லாம்
பருங்கினன் மெய்யும் பராசரன் றன்னை
விரும்பினள் போல வினவின ளன்றே
யருங்கல மாய வறிவினுள் மிக்காள். 733

என்னைப் பயந்தீரி• தென்னெனக் கேட்டன

ணன்னுத லாயிது வென்னெறி யென்றன
னன்னன• தாயி னறிவி யெனச்சொல
வின்னன கேளென் றெடுத்தனன் சொல்லும். 734

மன்னுயிர் தெற்றென வில்லது மான்செருக்
கென்னவு மிந்திய மைந்தைந் தொருமன
மன்னதன் மாத்திரை யைந்தைந்து பூதமும்
பன்னிய வையைம் பதப்பொரு ளென்றான் 735

எத்திறத் தின்னுஞ்செய் யான்குண மொன்றிலன்
றத்துவ னின்பன பேதன லேபக
னித்திய னெங்கு முளனெடுங் காட்சியன்
றுத்த லுடையனென் றோன்றலு மென்றான். 736

நின்று பரந்தரு வாய்ப்பொறி யேதுமிக்
கொன்று கிரிகையின் றப்பியத் தம்மது
சென்று செய் மானிற் செருக்கத்தி னீரெட்டு
மன்றியு மைவகைப் பூதமு மன்றே. 737

நின்று பரந்தரு வாய்ப்பொறி யேதுமிக்
கொன்று கிரிகையின் றப்பியத் தம்மது
சென்று செய் மானிற் செருக்கத்தி னீரெட்டு
மன்றியு மைவகைப் பூதமு மன்றே. 738

கதக்களி யானைமுன் கல்லெறிந் தாற்போற்
பதப்பொரு டம்மைப் பழுதென் றுரைப்ப
மதத்தினின் மிக்கவன் மாதரை நோக்கி
யுதப்பென்னுங் குற்ற முரையெனக் கென்ன. 739

செய்யா துயிரெனச் செப்புகின் றாய்நின்னை
வையா யுயிருள தன்றெனின் வாக்கிவை
மெய்யாம் பிறசெய்கை யாதலி னாலிவை
மையா மினிநின்றன் மார்க்கமு மன்றே. 740

எத்திறத் தின்னுஞ்செய் யானவ னென்றலிற்
றத்துவஞ் சொல்லுந் தலைமக னாகிய
சித்தியு மில்லாந் திருட்ட விரோதமும்
பொய்த்தலுள் ளிட்டவும் புல்லுமற் றென்ன. 741

பெருமை யுயிர்க்குரை யேன்செய்கை பின்னும்
இருமை யுயிரென தாமிடை யொன்றுங்
கரும வுயிரு மிவற்றினி னன்றே
யருமை யுடைச்செய்கை யாக்கமு மென்றான் 742

செய்யு முயிர்களுஞ் செய்யா வுயிர்கனும்
மெய்யி னுளவெனின் மேற்கோ ளழிதலும்
பொய்யும் பொதியறை மையுமற் றல்லவு
மெய்து மிதற்கினி யென்செய்தி யென்றாள். 743

சோம்பன் குணமிலன் றோன்றா வொளிப்பின
னோம்பற் கருமையி னுண்ணுமாற் றானுயி
னாம்பின்னைச் செய்ததெ னன்கவ னின்றியும்
போம்பொழு தேலவ னாற்பொரு ளென்னோ. 744

ஆண்டரு வாய்த்தொழில் யாதுமில் லாயின்
வேண்டின்மெய் யாகி விகிர்தி விகற்பொடு
தீண்டலு மொட்டலுந் தோ¢னி லாதவன்
காண்டற்குந் துத்தற்குங் காரண மென்னோ. 745

முத்தாத் துமனை முனிந்தோ வதுவன்றிப்
புத்தாத்து மாக்கட் புரிந்தோ விரிந்தெங்குஞ்
சித்தாத் துமனாய்த் திரிவின்றி நின்ற
சுத்தாத் துமைச் சுழற்றுவ தென்றாள். 746

பரமாத் துமனைப் பளிங்கடை போல
வருமாத்து மாக்களின் மன்னும் விகாரம்
தருமாத் திரையன்றித் தக்கதொன் றாக
வொருமாத் துமனை யுரைத்திடு கென்றாள். 747

செல்லு மெனினுஞ் சிதையுஞ் செல்லானென்று
சொல்லு மெனினுமுன் சொல்லிய தாமெய்தும்
பல்லுநுன் னாவும் பதையா துரையன்றி
யெல்லுந் துணையு மிருவினை யென்றே. 748

யானென தென்னுஞ் செருக்கினை யீன்பது
மானெனப் பட்டது மன்னுமோர் சேதனை

தானினை யாக்குத றக்கின்ற சேதனை
மேனினைத் தானுரைத் தானல்ல னென்றாள் 749

மான்றான் பகுதி வழித்தோ வழித்தன்றித்
தான்றான் பிறிதோர் பொருளோ யிரண்டொடு
மூன்றாவ தொன்றினி யின்றா விருந்தவிச்
சான்றா ரறியவுஞ் சாற்றினி யென்றாள். 750

முதற்பொரு ளேயாங் குணமது வாகின்
அதற்பிறி தென்னி னதுமனனு முண்டா
லிதற்கினி நீசொலற் பாலதென் னென்றாள்
சுதப்பொருண் மேனன்றுஞ் சொல்லுதல் வல்லாள். 751

அருவாய காரண மாயவ் வியத்த
முருவா மறுதலை யொப்பிக்கு மென்பாய்
மருவாத சொல்லினை மாதிரந் தானே
பருவாய்ப் பதக படைத்திடு மென்னாய். 752

பகைக்குண மாகிய பகுதி விகுதி
மிகைக்குணந் தோன்றுநின் மேற்கோ ளழித்துத்
தொகைக்கணம் யாவையுஞ் சூனிய மாமா
நகைக்குண மல்லது நம்பலை யென்றாள். 753

புத்தேந் திரியமுங் கம்மேந் திரியமும்
பத்தேந் திரியத்தோ டொன்றாய்ப் படைத்தனை
பித்தேந் திரியமும் பேயேந் திரியமும்
குத்தேந் திரியமுங் கொண்டிலை யன்றே. 754

தந்திர மாவன தாமிடைத் தோன்றுவ
வந்தர வாத்துவ னைந்தென வேண்டினை
சிந்தனை யுள்ளிட்டுச் சீவன் குணமெனி
னிந்திரன் றானு மிணைநுனக் காமோ. 755

கைகளுங் காலு மிருசா ரிடக்கரு
மெய்திய வாக்குமற்றிந்திய மாமெனிற்
செய்யும் புலனு மறியு மறிவுமற்
றெய்த வுணர்ந்திங் கெடுத்துரை யென்றாள். 756

காட்டிய வாறுங் கருமத்தி னாமெனி
னூட்டு முலையு முதடும் புருவமு
மாட்டுங் கவுளு மறமெல்லும் பற்களும்
கூட்டி மிடறுங் கொளக்குற்ற மென்னோ. 757

ஐந்துதன் மாத்திரை தாமணுவாற் றொடர்
கந்தங்க ணாதியிற் காம்புல னேயவை
வந்துபெருகி வரிசையி னான்மிகும்
புந்தியி னால்வகைப் பூதமு மென்றாள். 758

ஒன்றாய்ப் பரந்திவ் வுலகு மலோகமுஞ்
சென்றாய்க் கிடந்த தசேதனை தானென்று
மன்றா யருவா யதுவவ்வா காயமு
மென்றா ளெழினெடுங் கண்ணிணை நல்லாள். 759

தானரு வாய பொருளது வாமொலி
மேன்மரு வாதுரு வாதலி னான்மெய்ம்மை
நூன்மரு வாதுசொன் னாயிது வென்றனள்
மான்மரு வாவந்த நோக்கு மரியாள். 760

பகுதியின் மானில்லை யிதினு மதில்லை
தொகுதிசெய் பல்குணந் தோற்றமு மில்லா
மிகுதிசெய் பூதத்து மெய்ம்மை பெறாமற்
றகுதியின் றத்தநின் றத்துவ மென்ன. 761

குருடனும் பங்குவுங் கூட்டத்திற் கூட்டிப்
பொருடம் தாக்கமும் போத்தந் துரைப்பிற்
றெருட லிலையவர் செய்கையிற் செய்கை
யிருடன்னை யின்றி யிவையெய்து மென்றாள். 762

எவ்வகை யின்னும் விகார மிலாப்பொருட்
கிவ்வகை தம்மை யெடுத்துரை யென்செயும்
மெய்வகை யாலொப்பின் மேற்கோண் முதலிய
வவ்வகை யெல்லா மழிவுள தாமே. 763

கூடியு மாகாக் குணத்தின் நீயவட்
பாடி யுரைத்த வுயிரும் பகுதியும்
பேடிகள் சாரினும் பிள்ளை பெறாமையை

நாடியுங் காணென்று நன்னுத னக்காள். 764

இல்லுளி யின்றிமற் றெங்கு மிவைமுன்னும்
புல்லின வேயாற் புணர்ச்சி புதிதெனச்
சொல்லின தென்செயத் தோற்றப் படுபொருள்
பல்லன தாமவை பண்டு முளவே. 765

ஆட லழித்தல் படைத்த லடங்குதல்
வீடுபெற் றாங்கண் விளங்க நிலைமையுங்
கூடிய வைந்து குணத்தின னாதலி
னாடிய குற்றங்க ணண்ணல வென்ன. 766

ஓதிய வெல்லா மொருவனி னங்கொரு
நீதி வகையா னெறிமைப் படுதலும்
வாதுசெய் வார்கள் பிறராய் வருவது
மூதிய மில்லை யொழியென் றுரைத்தாள். 767

யானை குதிரை முதலாப் படைகுடி
யேனைய தாங்களு மெல்லா மவனெனிற்
றானென்று மாள்வது தன்னை யெனினங்கள்
கோனிவ னாமெனக் கூறினார் யாரோ. 768

என்னை யொழித்தினி யெல்லா மவனெனச்
சொன்ன முறைமைய னாகு மவனெனிற்
றன்னை யொழித்துத் தபுத்துடன் றின்றிடிற்
பின்னை யவனையோர் பித்தனென் னாமோ 769

தன்கையிற் றன்கண்ணைத் தானே பொதக்குத்தி
யென்செயக் குத்தினை யென்பார் பிறரில்லை
தன்கையிற் றன்கண்ணைத் தான்பொதக் குத்துவ
தென்செய வோவிதன் காரணஞ் சொல்லாய். 770

தன்னைப் படைப்பின்முன் றானின்மை யாலில்லை
பின்னைப் படைக்கிற் படைக்கப் படுவதின்
முன்னைப் படைப்பென் முடிவில்லை மூடனே
நுன்னைப் படைத்தவர் யாரினி நோக்காய். 771

கொன்றுகொன் றிட்டுத் தவஞ்செய்யி னத்தவம்

பொன்றுமற்றாதலி ன•தும் பொருத்தமின்
றின்றிதின் றிட்டுப் படைப்பிற் றெருட்சிமற்
றென்று மிலன்பெரி தேழையு மாமே 772

ஓர்ப்பவன் சொல்லவ னூனவன் றீனவன்
றீர்ப்பவ னோயவன் சீறு மவனுயிர்
நீப்பவன் சாபவ னீப்பவ னேற்பவன்
பேர்ப்பவ னாயும் பெறுகின்ற தென்னோ. 773

நாயாய்க் கடிக்கு நரியாய்ப் பலகொல்லும்
பேயாய்ப் புடைத்துண்ணும் பெற்றமு மாய்க்குத்து
மீயாய் நலியு மெறும்பாய்த் தெறுமெங்கும்
தீயா னொருவனின் றேவனு மென்றாள். 774

வீடு தலைபெற வெந்துநெஞ் சாண்டிடத்
தாடி தவஞ்செய்த தன்கா லழித்திடப்
பாடிய கையிற் படைக்கு மிவனெனின்
மூடர்கட் டேற்ற முடிவுமுண் டாமோ. 775

நித்திய மாய பொருணின வாதலின்
வித்தினு ளுண்டென வேண்டுதி நீள்பனை
யெத்துணை யோவது வென்னினு நுன்கைக்கு
மித்துணை யுண்டென்ப தென்னைகொ லேழாய். 776

இப்பொழு தில்லை யெதிரதற் குண்டெனி
னப்பொழு துண்மையு மின்மையு மாக்கி
னெப்பொரு டாங்களு மின்னன வேயெனச்
செப்பினள் தத்துவஞ் சேயரிக் கண்ணாள். 777

உருவோ டருவமா காயமு மூன்று
மிருபதின் மேலுமைந் தாக விசைத்தனை
யருவோ டலோக மசேதன மூன்றிற்
செருவோ டுரிமையிற் சேர்பவு மன்றே 778

ஒன்றொன்றி னொன்றி யுலகுள் வழியெங்குஞ்
சென்றவ னுண்மை பகுதி யிதுமன்னு
மென்றனை யெண்முறை யறிமற் றீண்டுபு
நன்றன வீறா நிலமுத னான்கே. 779

பத்தனை யாய்நின் பரமாத் துமனையுஞ்
சித்தனை யாகக் கருதியல் சீவன்கட்
கத்தன்மை ஞானமு மென்னா யவனுக்குத்
துத்தலுங் காண்டலுஞ் சொல்லினை யன்றோ. 780

வண்டார் குழற்பெயர் மாணிழை யிற்றெனக்
கொண்டே னெனவவன் கூறினன் கூறலும்
பண்டே லறியெனப்பராசர நீயினிக்
கண்டா யெனச் சொல்லிக் காட்சி கொடுத்தாள். 781

ஐந்து மிருபது மாகிய சொற்பொரு
டந்திவை யல்லது தத்துவ மில்லென்ற
சிந்தை யொழித்துச் சினவரன் சேவடி
வந்தனை யேசெய்து வாழிநீ யென்றாள். 782

-------------

## 9. வைசேடிக வாதம் 783 - 823

ஆட்டினா ளவனையு மாக்கிச் செல்பவள்
வீட்டினார் நெறியென விரித்த மேலையோர்
காட்டினார் பலருளுங் கணாத னேயெனு
மீட்டினா னுலோகன திடத்தை யெய்தினாள். 783

வனப்புடை மாதரைக் கண்டு மாதவன்
சினப்புடைக் கருத்தின ளென்னச் சிந்தித்தே
நினக்கினி நெறிவயி னின்ற மெய்ம்மையை
மனக்கொளக் கிளக்குவேன் மன்னுங் கேளென. 784

நெறியெனப் படுவது நின்ற மெய்ம்மையங்
கறிதலுக் கரியன வாறு சொற்பொருள்
செறியயான் சொலிற் றிரப்பியங் குணந்தொழில்
பொறியினாய் பொதுசிறப் புடன் புணர்ப்பதே. 785

பூதமைந் தொடுதிசை மனம்பொ ழுதுயி
ரோதினப் பொருள்கடா மொன்ப தாமவை
நீதியிற் குணமவற் றியல்பு செய்கையும்
போதரும் பொருட்புடை பெயர்ச்சி யாகுமே. 786

பெரியதும் பின்னது மாய தப்பொது
உரிதினிற் பொருள்களைச் செலுத்து மொற்றுமை
தெரிவுற வருவது சிறப்ப தாங்குணக்
கிரியைக ளிதற்கெனக் கிளத்தல் கூட்டமே. 787

ஆறின் முதன்மூன் றத்தி மற்றவற்
றீறின் மும்மையு மின்மையை யெய்தின
கூறின பொருள்களுங் குணனுஞ் செய்கையும்
வேறென விரித்தனன் விசேட வாதியே. 788

தத்துவ மிவையெனத் தலையுந் தூக்கினாட்
கொத்ததன் றோவென வுரைநல் லாயினி
யித்தவ மிப்பொரு டேறி யான்செயிற்
பொய்த்தவ மாதலிற் போவ னென்னவே. 789

மெய்ந்நெறி யிதுவென விரிப்பக் கேட்டிருந்
திந்நெறி யமைதியின் றென்னுஞ் சொல்லினாய்
பொய்ந்நெறி யாதலைத் தேற்றிப் போகெனக்
கைந்நிறுத் தாளது காட்டக் கேளென. 790

நிலமுதற் பூதமாய் நின்ற நான்மையுங்
குலமுதன் மூர்த்தியாய்க் கூறி னொன்றவை
யலமுதற் பொருள்களாய்ப் பன்னி னாயவை
வலமுறை யிடமுறை வருதல் காட்டுகோ. 791

உரியதோர் நீரணைந் துப்ப தாகுநெய்
யெரியெழு முளர்ச்சியா லிரைக்குங் காற்றதாம்
பெரியதோ ருருமுநீர்ப் பிண்டம் வந்துநீ¡;
வரிசையிற் படலமாய் வந்த வல்லவோ. 792

ஒலியதன் குணமென வுரைத்தி யாதலால்
வலியுடை நிலையில மற்றெப் பூதமும்
ஒலியொடு முதறம்முட் புல்ல லின்மையாற்
கலிசெய லொழிகநின் காய மென்றனள். 793

சுட்டின திசைத்திறஞ் சொல்லிற் சூரியன்
பட்டது மெழுந்ததும் பற்றி நான்குமாய்

யெட்டெனப் பலவென வின்ன தன்மையாற்
கட்டினர் வழங்கினுங் காய மெய்துமே. 794

மண்டிலம் பலரையு நிறுவி மத்திமங்
கொண்டுநின் றான்றிசை கூறு மின்னென
வெண்டிசை யவன்வயிற் பிறக்கு மென்பவேற்
கண்டில நின்பொருள் காட்ட வல்லையோ. 795

அத்திசை யவனுமா யல்ல னும்மென
வெத்திசை யவர்களு மிசைப்பி னேகநீ
பத்திசெய் தினியென்னைப் பரமன் பாதமே
சித்தியு முடிவெனச் சேர்ந்து வாழ்தியே. 796

மன்னுமம் மனமெனப் படுவ தாவதே
யின்னுயி ருருவினோ டியைந்த வொற்றுமை
யின்னுமக் காலமு மிருமைத் தாகலி
னின்னுடைப் பொழுதவ ணிற்ற லில்லையே. 797

குணங்களுந் தொழில்களுங் கூறி வேறெனிற்
பிணந்தனைச் சீவனாய்ப் பெற்ற தென்னையோ
வுணர்ந்தில னுரையுமொன் றிலனெனி னுறுதிநாம்
புணர்ந்தில மவன்வயிற் போந்த தில்லையே. 798

எப்பொரு ளெக்குணத் தானு மில்லையே
லப்பொரு ளக்குணத் தயல தாதலாற்
செப்பிலக் குளிரினாற் றீய துண்மைபோற்
றுப்பெனப் பொருள்களுந் தோற்ற மில்லையே. 799

குணத்தொடு குணிகளைக் கூறி வேறெனப்
புணர்ப்பதோர் பொருளினை வேண்டிற் பொய்யெனிற்
குணத்தொடு குணிகளுங் கூட்ட மின்மையா
லுணர்த்துதற் கரிதவை யுளவு மல்லவே. 800

ஒன்பதுந் தத்தும துண்மை யாற்பல
வென்பது மெனைத்தென வெண்ணப் பட்டதும்
வன்பிதன் குணமிது வென்னப் பெற்றது
மன்பதற் குடைமையி னறியப் பட்டதே. 801

அதனது குணமதற் கயல தாதலா
லிதனது குணமென விழுக்கிற் றென்னையோ
உதனமு முணர்விலை யொன்ற தென்றக்கால்
விதனமும் படாயது மெய்யு மாகுமே. 802

கெடக்கெடும் பொருளெனிற் கேடு முண்டெனப்
படப்பெறு மதற்குநி பரிவ தென்னையோ
வடக்குந்தன் றோற்றமு மொட்டி மும்மைய
மடக்கிலு மதுபெரி தழகி தாகுமே. 803

குணங்கடாங் குணியெனுங் கூற்று முண்மையிற்
பிணங்கலாய்ப் பொருள்வயிற் பேறு முள்ளதே
யிணங்கலா யிருமைய தின்மை யுண்மையும்
வணங்கலாம் வகையதோர் மாட்சி மிக்கதே. 804

பண்பினாற் பொருள்களுக் காய பல்பயஞ்
செண்பினா னறிவினான் செறிவி னானென
மண்பொனாற் குணநிலைக் காய மாட்சியா
நண்பினா னல்லது நடத்த லில்லையே. 805

விலைபெறு நன்மையால் வெறுப்ப தீமையால்
கொலைபெறுங் களவினாற் குணத்தி னக்குண
நிலைபெறும் பொருளினா னின்ற வொற்றுமை
யலைபெறும் வேறெனி னாவ தில்லையே. 806

நல்வினைப் படுதலுந் தீவினைப் படுதலும்
பல்வினைப் பாகினாற் பயங்க ளெய்தலு
மில்வினைக் குணங்கடா மென்றும் வேறெனிற்
சொல்லில சுழற்சியும் வீடுந் தோற்றமே. 807

ஆட்டுடை யாடன வாட றாங்களூ
மோட்டுடைக் குதிரையு மோட்டு மென்றின்ன
கூட்டிய வப்பொருட் கொடைய வாதலான்
மீட்டவை யொன்றென வேண்டல் வேண்டுமே. 808

கூத்த ராடலுங் குதிரை யோடலு
மோத்துரை யுள்பட வொழிந்த யாவையு
நீத்தன வேயல்ல நிலையு முண்மையிற்

போத்தரல் வேண்டினப் பொழுதி னாகுமே. 809

பிணங்கல வாய்த்தம்முட் பிறக ளாகிய
குணங்களுந் தொழில்களுங் குழுமிக கெட்டன
புணர்ந்துடன் பொருள்வயிற் போந்த வாறுநீ
யுணர்ந்திலை யதுவுநின் னுடைய தேபிற. 810

பாதுவெலாப் பொருளொடும் பொருந்தி நின்றதே
லதுவெலாப் பொருள்களை யாக்கு மொற்றுமை
யிதுவலா லவைதம்மு ளியைத லில்லையேல்
செதுவலாம் பிறவது சென்ற தென்றலே. 811

அன்றியும் பொதுவது வந்தமில் பொருட்
சென்றதே யென்றலாற் சிதர்ந்து பன்மையாய்க்
குன்றியுங் கூடியு நின்றுங் கொள்பய
மின்றியும் போதலா லென்னை யாயதோ. 812

பொதுவெனப் படுவதோர் போலி யாதலாற்
பொதுவெனப் படுவன போன்ற தாங்களே
யதுவென மீட்டிருந் தாறென் றெண்ணுவா
யிதுவென வென்னையிங் கிதனோ டேழெனாய். 813

சிறப்பெனப் படுவது தெரியி னப்பொரு
ளறப்பெற நின்றவக் குணம தாதலின்
இறப்பவு மிதுதன தின்மை யேயினாய்
புறப்படுத் திடுவனுன் பொருள ளெண்ணலே. 814

கூட்டினா லல்லது கூட்ட மில்லையேற்
கூட்டுவான் செல்வதுங் கூட்ட மில்லையே
பாட்டினாற் பலவுமாம் பயமி லாதன
மூட்டினா லுரைத்தியோ முனிவு போக்கிதோ. 815

கொக்கொடக் கருமையைக் கூட்டு வித்தலுஞ்
சுக்கொடத் துவர்ப்பினைத் துன்னு வித்தலுஞ்
சிக்கென வேற்றுமை தீர்ப்பி நீயென
நக்கன ளளியனோ நயவ னென்னவே. 816

என்றுமப் பொருள்களு மியல்புந் தங்களோ

டொன்றென வருதலா லொன்று மாகுமே
யென்றலி லிருமையுந் தெரியி னின்மையா
லின்றினிக் கூட்டுவ தில்லை யில்லதே. 817

ஒன்றுநற் பொருள்கடாங் குணங்க டாம்பல
வென்றுநீ யேகம் வேறென்ப தென்னெனப்
பொன்றுமக் குணமெனிற் பொருட்கு மாமென
நன்றினிக் குணமுண்மை நாட்ட மாமென. 818

குணிக்கணா னோக்கினாற் குணங்க ளில்குணத்
தணிக்கணா னோக்கினா லதுவு மன்னதே
பிணிக்கலாம் பிரிக்கலாம் பெற்ற நான்மையிற்
றுணிக்கலாந் துருநெறி துன்னு நன்மையே. 819

இல்லையக் குணங்குணிக் குண்மை தானெனச்
சொல்லினக் குணிகுணத் தொன்று மாதலா
லல்லதக் குணங்களு மவைக ளாமென
நல்லதித் துணிவென நயத்தி லெய்தினான். 820

பொருளொடக் குணந்தொழிற் குண்மை யொன்றெனத்
தெருள்வது மும்மையிற் றெரிய வைப்பது
மருளுடை யறநெறி யண்ணல் சேவடி
யிருள்கெட நினைத்தலு மினையை யாகென. 821

ஓம்படுத் துலோகனை யொழியச் சொல்லியான்
காம்புடைக் கடநெறி கடப்ப னென்னவே
பேம்படுப் பவரொடும் பிரிவின் னாமையைத்
தேம்படு கிளவிநீ சிந்தி யென்னவே. 822

ஒக்குமவ் வுரையென வுள்ள தேயென
நக்கன ளாகிய நாதன் சேதியஞ்
சிக்கென வேத்துதல் சிறந்த தென்னவே
தக்கதென் றவன் சொலத் தானு நீங்கினாள். 823

------------------

## 10. வேத வாதம் 824 - 853

காதம் பலவும் கடந்தபின்காகந்திக் கடிநகருள்
வேதமு மங்கமும் விச்சைகணிலைமையும் வேண்டுநர்கட்
கோதவுங் கேட்பவு முரைத்தலினுலகினு ளறியப்பட்டான்
பூதிக னெனப்படு மந்தணனோத்திடம் புக்கனளே. 824

என்னை யிங்குநும் பொருளெனவினவலு மிவ்விருந்த
வன்னைதன் வரவிதே லாதியிலருமறை யதுமுதலாப்
பின்னைவந் தனகளு மிவையெனப்பையவே யெர்த்துரைத்தான்
முன்னமங் கிருந்தவோர் முதுமகனவைதன் முறைமையினே. 825

நாத்திக மல்லது சொல்லலையாயின்மு னான்பயந்த
சாத்திர மாவது வேதமன்றோவது தான்சயம்பு
சூத்திரி நீயது வல்லையலாமையிற் சொல்லுகிறாய்
போத்தந்தி யோவதன் றீமையென்றான்பொங்கிப் பூதிகனே. 826

பூதிகன் றானது சொல்லலும் யானது வல்லனெல்லாம்
சாதிகண் டாயெனத் தான்றள ராது சாற்றுகென்றாட்
காதியென் றானுமோ ரந்தமென்றானுமுண் டேலதற்கு
நீதியி னாலுரை நீயினி யானது நேர்வ னென்றான். 827

செய்கையும் புதுமையு முடைமையிற்றிருட்டத்தின் மறுதலையிற்
பொய்யொடும் பொருளொடுங் குவகொடுஞ்சாலவும் பொருந்துதலின்
மையறு மயக்கமு மாற்றொடுகொலைமன்னு மருவுதலின்
ஐயமி றீக்கதிச் செலுத்துவததுவென்னை யாவதென்றாள். 828

யாரது செய்தவ ரறியிலிங்குரையெனி லங்கொருவ
னூரது நடுவணொ ருஜறயுளில்மலம்பெய்திட் டொளித்தொழியிற்
போ¢னு முருவினும் பெறலிலனாதலின் றாக்குறித்துத்
தோ¢னு மினியது செய்தவரில்லெனச் செப்புவவே. 829

தோற்றமு நாற்றமுஞ் சுவையுடனூறிவற் றாற்றொடங்கி
யாற்றவு மாயிரு வேதம்வல்லார்கள• தறிந்துரைப்ப
மேற்குலத் தாரோ டிழிந்தவரென்பது மெய்ம்மைபெறா
நூற்றிறஞ் செய்தவ ரறிகுவர்நுழைந்தறி வுடையவரே. 830

முயற்சியி னிசைத்தலி னெழுத்தினிற் பதத்தினின் முடிவதனால்

செயற்பட லுடையத னியற்கையிற்செய்தவர் பெயர்பெறலா
லியற்கைய தன்றுநின் வேதமென்றேதுவி னெடுத்துரைத்தாள்
புயற்றிற லிகலிய கூந்தலின்பெயருடைப் புலமையினாள். 831

கதியவர் தம்பெய ரின்னவைசுட்டின காட்டலினு
முதியவர் நாள்களொ டொப்பிலவிப்பொழு தொத்தலினும்
விதியது வாதலின் வேதத்தையாஞ்சொல்லுங் கீதத்தைப் போற்
புதியது வேயெனச் சொல்லுதுநாமது பொருந்து மென்றாள். 832

கொல்வது தீதெனப் பொருள்வழிவேள்வியிற் கொலப்படுவ
வெல்லையொன் றிலதென்ப விணைவிழைச்சொழிகென்ப வம்முகத்தாற்
செல்கதி யுளதென்ப தீர்த்துகநெறியென்றுந் தீயவென்று
பல்லவர் துணிவுமெம் வேதத்தினுளவெனப் பயின்றுரைப்ப. 833

சாதிக்கட் பயவா தவப்பயந்தருமெனத் தந்துரைப்ப
வாதிக்க ணான்வழி நால்வரதமைதியை யமர்ந்துரைப்ப
சூதித்த தோற்றமும் பிழைப்பெனச்சூத்திரப் பிறவிகொள்ளார்
வாதித்த வாறென்று தெருண்டவர்க்கிவையிவை மயாமயக்கே. 834

மறுதலை தத்தமு ளாக்கிமயக்கமுஞ் செய்தமையாற்
பெறுதலை யென்னைகொ றத்துவந்தனையன்று பறுமுண்டே
யுறுதியுஞ் சால்பு முடையனயாவையு முண்மையினாற்
செறுதலை யேவில்லை சீர்த்தனசெய்விக்குஞ் சிட்டிதுவே. 835

வசுக்களொ டுருத்திரர் பிதிரரோடிவர்முத லாப்பலர்க்கும்
பசுக்களோ டெருமைகள் குதிரைகள்புலியொடு நாய்முதலா
விசுக்கிழிந் தனபல கொலைகளுமிரங்கலிர் கொன்றவரை
யசிப்பவர் போன்றனி ராயினுமருவினை யாநுமக்கே. 836

தேவரும் பிதிரரும் நுதலிய கொலைகளிற் றீவினைதா
மேவர வல்லன வேண்டுவல் யானென வேண்டுதியேல்
யாவரையு நுதலியு மவரவர் செய்தன வவரவர்க்கே
யாவரி னடையுமவ் வருவினை நுமக்கறி வரியதென்றாள். 837

ஊட்டுதும் யாமென் றுமர்களைநுதலியோர் சாலைவைத் தால்
வீட்டினங் கிடலின்றி வினைநிலைநுமக்கறி வரியதுபோல்
கூட்டிமற் றவர்களை நுதலியகொலைவினை தங்களையுங்
காட்டுகில் லாரவர் தாமவையறிவதோர் கணக்கிலரே. 838

சிறந்தவர் தங்களுக் கெய்துகசென்றென்னுஞ் சிந்தையரா
யறம்பல செய்தவர்க் கல்லதங்கவர்களுக் காகுமென்றாற்
றுறந்தவர் வீடுபெற்றார்களைநுதலிய தொடர்வினையும்
பிறங்கியிப் பிறவியிற் போக்குமற்றிவையென்ன பேதைமையே. 839

நண்பரை நுதலியும் பகைவரைநுதலியு மமிர்தொடுநஞ்
சுண்பவர்க் கல்லதற் கவர்களுக்காமென வுரைக்குநர்யார்
பண்பிலி தேவரை றுதலியகொலையினிற் பல்வினைதா
னுண்பல வகையினி னடைந்தவைவிளையுங்க ணுமக்குமென்றாள். 840
கொன்றவர்க் கல்லது நுதலப்பட் டார்களைக் கூடலவேற்
றின்றவர்க கியாவையுந் தீவினைசேரல தேவர்க்குப்போ
லென்றுரைப் பாய்க்கெய்து மேழைமையுண்குவ வேலிமையார்க்
கொன்றுவி யேனல னோவினையூன்றின்பவர்க் கொப்பவென்றாள். 841

ஈகளு நாய்களுங் கொன்றவரீவகண் டின்புறலிற்
றீயவை யேசெய்யுந் தேவரத்தீவினை தீர்க்கிற்பவோ
நோய்களும் பேய்களு மொழிக்குவமெனினவை நுங்களுக்கு
மாய்விடி னுணரின• தாம்வினையகற்றுதற் கரியதென்றாள். 842

நம்முறு துன்பங்க ணாமொழிக்கல்லலம் பிறருறுப
வெம்முறை யாயினும் போக்குதற்கரியவிங் கிவர்களைப்போற்
றம்முறு துன்பமும் தாமொழிக்கில்லலர் பிறர்களையே
லெம்முறை நோய்களுஞ் செய்குபவவரென விகழ்ந்தனளே. 843

நாங்கொன்று கொடுக்குமவ் விலங்கினைநலிவதோர் பசியினரேற்
றாங்கொன்று தின்குவ ராய்விடினவர்களைத் தவிர்க்குநர்யார்
தீங்கொன்று முரையன்மின் தேவர்தம்மூணினைச் சேணின்றுதாம்
வாங்குத லல்லது முடையொடுசோறுண்ணும் வயிற்றினரே. 844

845 ஆஞ் செய்யுளிலிருந்து 851 ஆஞ் செய்யுள்
முடியவுள்ள எட்டுச் செய்யுளும் சுவடியில் இல்லை. 845 - 851

பொய்த்துரை யாநன்மை போதுவ தேலில்லை பூதிகனே
சத்திய மேயுரை நீயெனத் தானும• தேயுரைத்தா
னெத்திசை யார்களு மேத்துதற் கேற்றன னிவனுமென்றார்
தத்துவ ரேநின்று தத்துவ ரெனப்படுந் தன்மையினார். 852

நன்பொரு ளாவன விவையெனவவனோடு நகரத்துள்ளா
ரின்புறும் வகையினி னெடுத்தன ளுரைத்தபின் விடுக்கலுற்றாட்
கன்புபட் டவர்களு மறநெறியறிவித்த வார்வத்தினாற்
பின்புசென் றொழிதுமென் றதுசெய்துவலங்கொண்டு பெயர்ந்தனரே. 853

-----------------

## 11. பூத வாதம் (854 – 894)

வேத வாதம் வெளிறுசெய் தாளங்கோர்
பூத வாதியும் பொங்கினன் மேற்செல
வாத வாதி யிவனை யடக்கினா
லேத வூதிய மில்லென வெண்ணித்தான். 854

நில்லப் பாவினி நீகண்ட தத்துவஞ்
சொல்லற் பாலையிங் கென்னலுஞ் சொல்லுவான்
மல்லற் றானை மதனசித் தன்னெனுங்
கல்லொத் தோங்கிய தோட்களி யானையான். 855

அணிகொ ளாரத் தரசவை கேட்கெனப்
பிணிகொள் மூஞ்சிப் பிசாசகன் சொல்லுவான்
குணிகு ணம்மெனுங் கூற்றில னாலதென்
றுணிவைம் பூதங்க ளேதொழில் சொல்லுவேன். 856

தண்ணென் றீநில நீர்வளி காயத்தாற்
கண்ணு மூக்கொடு நாமெய் செவிகளாய்
வண்ண நாற்றஞ் சுவையினொ டூறொலி
யெண்ணுங் காலை யியைந்துழி யெய்துமே. 857

ஐந்துங் கூடிய றிவின்ப மாதியாய்
வந்து தோன்றி மதுமயக் காற்றலி
னந்தி நாளுங் குடஞ்சுடர் நாட்டம்போற்
சிந்தி னாலவை சென்றினஞ் சேருமே. 858

உலகெ லாமவை யேயுயி ருண்டெனச்
சொலவ லாரன சொற்றெளிந் தேநின்று
பலக லாங்களுஞ் செய்வ பயனிலார்
புலவ ராவதன் றோவங்குப் போந்ததே. 859

சென்ற காலத்துஞ் செல்கின்ற காலத்து
நின்ற காலத்தி லும்மிந் நிகழ்ச்சியே
யென்று மிவ்வுல கித்தன்மைத் தேயிது
வன்ற தென்றுரைப் பாரயர்ப் பார்களே. 860

இட்ட மாவ திதுவெனக் கேட்டவள்
சிட்ட ரன்றியுஞ் சென்றிருந் தார்க்கெலா
மொட்டி மீட்டு முரைத்துளந் தான்கொளீஇக்
கட்டு ரைய்யெடுத் தாள்கயற் கண்ணினாள். 861

வினையி னீங்கி விளங்கிய ஞானத்தோர்
முனைவ னின்மையி னான்முதல னூலில்லை
யனைய மாண்பின தாகம மாதலாற்
புனைவ னின்னுரை பொய்யெனச் சொல்லியே. 862

கவைத்த கோலொடு கட்டில் கடிஞைகாத்
தவத்திற் கொத்தன தாங்கினித் தாபதம்
அவத்த மேபிற வாருயி ரில்லையேற்
சுதத்தி னாலுய்த்தல் சூதது வாகுமே. 863

பூத மல்லது பொய்பிற நூலென்று
வாதஞ் செய்து வருந்தி முடிப்பதென்
நாத னன்னெறி நல்வினை நற்பயன்
யாது மில்லை யெனின• தவத்தமே. 864

யாது மில்லை யுயிரிவை யாஞ்சொல்லும்
பூத மேயெனப் போந்திருந் தென்னொடு
வாதஞ் செய்கின்ற பூதமவ் வாதமோ
யாதைம் பூதங்க டம்முள்ளு ம•தினி. 865

அளித்த வைந்திற் கறிவின்ப மாக்குவான்
களித்தற் காற்ற லுடையன காட்டினாய்
களித்தற் காரண காரிய மூர்த்தியா
லொளித்து நின்ற வுணர்வுரு வென்றியோ. 866

உருவின் காரிய மேலுரு வென்றுண
ரருவின் காரிய மேலவா காயக்கா
மொருவன் காரிய மன்றுணர் வென்கின்றாய்

மருவுங் காரண காரிய மற்றெனோ. 867

வையு மண்ணு மயிரு மலமுமோர்
பையுள் வைக்கப் பளிங்கும் பயக்குமோ
பொய்யைம் பூதம் புணர்ந்துணர் வோடின்பம்
செய்யு மென்பது சிந்திக்கற் பாலதோ. 868

கள்ளப் பூதமுங் காமிக்கும் பூதமும்
வள்ளற் பூதமும் மல்லவு மல்லவா
லுள்ளப் பூதமொன் றாக்குவ துண்மையைக்
கொள்ளப் பூதக் குணமவை யல்லவே. 869

பொறியைந் தாலைந்து பூதத்தி னாகிய
வறிவைந் தாலைந்து மவ்வைந்திற் காகுமோ
பிறிதொன் றோபொருட் பெற்றிமற் றிற்றெனக்
குறிகொண் டாயொன்று கூறெனக் கென்னவே. 870

ஒன்றன் காரிய மொன்றென வொட்டினுஞ்
சென்றெ லாமவை சேதனை யாகுமே
யன்றெ லாமவை யாக்கமொன் றேயினி
யென்ற லானும• தின்னுயி ரெய்துமே. 871

அனைத்துப் பூதமு மேயறி வாக்கினான்
மனத்துக் கின்னுமோர் பூதத்தை மன்னுநீ
நினைத்துக் காணன்றி நேடியுங் காணையா
வெனக்கு நீசெய்வ தித்துணை யேயினி. 872

பிண்ட மாகிப் பிறந்தன யாவையும்
உண்டுங் கண்டு முணர்ந்தவுஞ் செய்தவுங்
கொண்டு மீட்டவை கூறுதல் கூறுங்கால்
கண்ட பூதத்துக் காரிய மென்றியோ. 873

பிறந்த நாள்களுட் பிள்ளையு மல்லவு
மறிந்து தாய்முலை யோடல்ல வுண்டிக
ளறிந்த வாறென்கொ லோவைந்து பூதமுஞ்
செறிந்த நாள்களுட் செய்வன வல்லவால். 874

புத்தி யானின்றிப் பூதத்தி னாயவேற்

பத்து மல்லவும் பன்றிக்கு நாய்கட்கு
மொத்த தன்மைய பன்மைய குட்டிகள்
வித்தி னாய வினைவிகற் பாம்பிற. 875

குறைந்து பூதங்கள் கூட்டமுண் டாமவ
ணுறைந்த பூதத் துணர்வல்ல தின்மையா
லறைந்த பூதங்க ளைந்துமங் கில்லெனின்
மறைந்த பூதத்தி லுண்மைவந் தெய்துமால். 876

நீருங் காற்றுமல் லானில மில்லையோ
வூருஞ் சங்கினோ டூர்மச்சி மூக்சில
தோ¢ யுண்டலிற் றீயுமுண் டில்லைகண்
காரி யஞ்செவி காணலங் காயக்கென். 877

ஒன்றொன் றாக வுணர்ச்சி முறைமையாற்
சென்று பூதங்கள் சேர்வதற் கேதுவென்
குன்றித் தத்தமுள் யாவையுங் கூடுமே
னின்ற மெய்ம்மை நினதென நேர்வல்யான். 878

ஐந்து பூத மவற்றவற் றாலைந்து
மிந்தி யங்க ளியையு மிவையெனுஞ்
சிந்த னையொழி நீயெனச் செப்பினா
ளுய்ந்து வாழு முயிருண்மை யொட்டினாள். 879

உணர்வு மின்பமு மோரறி வாதிக்கட்
புணரு மேயெனிற் பொய்தொகைக் கண்ணென
லுணர்வு மின்பமு முள்வழி யேயுயிர்
புணரு மென்றனள் போதன கண்ணினாள். 880

காற்றி னாலுடம் பாமெனிற காற்றினே
தோற்றி னாலுயிர் தான்றொகை யென்செயு
மாற்றிவ் வைந்தினு மாருயி ராமெனு
மாற்ற மாயின் மனங்கொளற் பாலதே. 881

வேறு வேறைந்து பூதமு மெய்ம்மையா
லீறுந் தோற்றமு மில்லுயி ராயின
பாறி யாவையும் பாழ்த்தொழி யும்மெனக்
கூறி னாயது குற்ற முடைத்தரோ. 882

குழவிக் காலத்துக் கூறின யாவையுங்
கீழவுக் காலத்துக்கண்ணவை கேட்டலா
லிழவெக் காலு மிலானினி யார்களைத்
தொழுவிப் பானங்கோர் தோன்றலுந் தோன்றுமே. 883

துன்பந் தூய்மையுந் துட்கென வுட்கலும்
அன்பு மானமு மாயமு மாண்மையு
மின்பு மென்றிவை யாக்கிய தீதென
முன்பு நின்று முறுக்கவும் வல்லையோ. 884

கனவு மந்திரம் சிந்தனை வாழுநாள்
வினவு சோதிடங் கேட்டுரை புட்குரல்
அனகள் யாவையு மென்னைநின் பூதங்க
ளனகொ னீயிங் கறிந்தனை சொல்லென. 885

வைத்த வத்து மறுபிறப் பிற்றமர்க்
குய்த்துக் காட்டுத லேலுல கொட்டுமா
லெத்தி றத்தினு மில்லுயு ரென்றிநீ
செத்து வம்மெய்திற் சில்லைமை செய்பவால். 886

பேயு மில்லை பிறப்பது மில்லென்பாய்
வாயுங் கிள்ளிப் புடைப்ப வருவதென்
மாயத் தாலன்றி மந்திரத் தாற்றெய்வங்
கூயக் காலறங் கோடலை யொட்டென. 887

ஒட்டி னேனென் றுரைப்ப வுணர்விலா
முட்டை காண்கென முனகை முறுக்கியே
சுட்டி னாளங்குத் தோற்றமு நோக்கென
விட்டுத் தான்றன் விகுர்வணை காட்டுவாள். 888

கழுதுங் காணலராகிக் கலங்கியே
யழுதுஞ் சாப வகலிடத் தாரிவன்
முழுதுங் காணின் முடியு மெனமுன்னி
வழுவில் வாயும் வளைபல்லுந் தோற்றலும். 889

கண் புதைத்துக் கவிழ்ந்தனன் வழவே
திண் பதத்திற் றெருட்டி யெடுத்திரீஇப்

பண்பு தக்கன சொல்லிப் பரியனின்
நண்ப தென்று நடுக்கமுந் தீர்த்தபின். 890

பேய்கண் டாயதன் பெற்றி யுரையென
வாய்கண் டேனென்னை வாழ்க்கை வலியன்மின்
நோய்கொண் டேனென வஞ்ச னுனக்கவ
டாய்கண் டாயென்றுஞ் சாதலில் லையென. 891

பெற்ற பேரும் பிசாசிக னென்பதே
யற்ற மின்றி யவட்கு மகனைநீ
குற்ற மில்லறங் கொள்ளின்மற் றெம்மொடு
சுற்ற மாதலிற் சொல்லெனச் சொல்லுவான். 892

பிறப்பும் பேயு முதலாப் பிறகளுந்
திறத்தி னீசொன்ன யாவையுந் தேறிநின்
றறத்தை யானு மமைவரக் கொண்டனென்
மறக்க லேனினி மன்னுமை யானென. 893

பேந்தரு தோற்றப் பிசாசிக னிற்றென
வேந்துமவ் வேத்தவை யாரும் வியப்பெய்தி
யாய்ந்த கேள்வியி னாளை யையா யென
மாந்தர் யாரு மதித்தன ரென்பவே. 894

----------------